(இ-ள்.) வரைவுவேண்டி நீயெம்மாட்டுக் குறையுடையையாய் நிற்குமதனானும், கல்விமிகுதியானும், செல்வானும், தங்குலத்திற்கேற்றநின்குலத்தானும், நீவிடுக்கவந்தசான்றோரது நிறைவானும், மேவுதற்குத்தகு நீதியானும், நின்வரவையெமரேற்றுக்கொளினல்லது விலைகூறுவராயின், ஆராயுமிடத்து மெய்ம்மைசொல்லுவார்க்கு விற்போலவளைந்த நுதலையுடையாட்கு ஏழுலகும்விலையாமோ! விலைக்குறையாம். எ-று. எல்லாப்பொருட்குமிறைவன், வில்லாகியவனைத்தலையுடைய வரையையேந்துவான், வளவியதில்லைக்கண்ணான், அவனுடைய எழிற்பொழிலுமெனக்கூட்டுக.

செல்வு - இருமுதுகுரவராற்கொண்டாடப்படுதல். நிறைவு - அறிவொடுகூடியவொழுக்கம். நீதி - உள்ளப்பொருத்தமுள்ளவழி மறுக்காதுகொடுத்தல். உறைவிலென்பதற்கு - உறைவையுடைய வில்லென்றுமமையும். (௨௬௬)

## வருமதுகூறிவரைவுடம்படுத்தல்.

வருமதுகூறிவரைவுடம்படுத்தலென்பது - முலைவிலைகூறியதோழி, நீவரைவொடுவாராது இரவருள்செய்யாநின்றவிது கேட்பதற்கேதுவானால் நம்மெல்லார்க்கும் பொல்லாதாம், அதுபடாமல் எமராற்றொடுக்கப்பட்ட அருங்கலங்களை விரையவிட்டு அவளைவரைந்தெய்துவாயாகவென மேல்வருமிடுக்கண்கூறித் தலைமகனைவரைவுடம்படுத்தாநிற்றல். அதற்குச்செய்யுள்.

வடுத்தனநீள்வகிர்க்கண்ணிவெண்ணித்திலவாணகைக்குத் *
தொடுத்தனநீவிடுத்தெய்தத்துணியென்னைத்தன்றொழும்பிற் *
படுத்தநல்லீர்ங்கழலீசர்சிற்றம்பலந்தாழ்ப்பணியார்க் *
கடுத்தனதாம்வரிற்பொல்லாதிரவினின்னாரருளே. (௨௬௭)

தொடுத்தனவிடுத்துத் தோகைந்தாலெய்
திடுக்கண்பெரி திரவரினென்றது.

(இ-ள்.) என்னைத் தன்னடிமைக்கட்படுவித்த நல்லதீர்ங்கழலையுடையவீசரது சிற்றம்பலத்தைத் தாழ்ந்துபணியாதார்க்குத் தகவனவாகிய தீதுகள் உனக்குவரக்கூடுமாயின், இரவின்கணுண்டாகிய நின்னாருள் எமக்குப்பொல்லாது, அதனான் வடுவைவாகிய நீண்ட வகிர்போலுங்கண்ணையுடையாளது தூயமுத்துப்போலுமொளியையுடைய முறுவலுக்கு எமராற்றொடுக்கப்பட்டனவாகிய பொருள்களை நீவரவிட்டு வரைந்தெய்தத் துணிவாயாக. எ-று.

நீள்வகிர்க்கண்ணியாகிய வெண்ணித்தில வாணகைக்கென்றுரை

ப்பினுமமையும். தொடுத்தன - பலவாகவகுக்கப்பட்டன. படுத்தனநீள்கழலென்பதூஉம்பாடம். சிற்றம்பலத்தாம்பணியார்க்கடுத்தனதாம்வருகையாவது கெர்ப்பம்வருகை. அடுத்தனதாம்வரினென்பதற்கு நீவரினமக்கடுத்தனதாமுளவாமென்று பொருளுரைப்பாருமுளர். அடுத்தனதான்வரினென்பது பாடமாயின், தாமென்பது அசைநிலை. இவையிரண்டற்கும் மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - அது. (௨௬௭)

## வரைபொருட்பிரிவையுரையெனக்கூறல்.

வரைபொருட்பிரிவையுரையெனக்கூறலென்பது - மேல்வருமாறு கூறி வரைவுடம்படுத்தினதோழிக்கு, யான்போய் நமர்கூறு நிதியமுந்தேடிக்கொண்டு நம்மையும்வந்துமேவுவேன், நீசென்று அவள்வாடாதவண்ணம் யான்பிரிந்தமைகூறி ஆற்றுவித்துக்கொண்டிருப்பாயாகவெனத் தலைமகன் றன்வரைபொருட்குப் பிரிகின்றமை கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

குன்றங்கிடையுங்கடந்துமர்கூறுநிதிகொணர்ந்து *
மின்றங்கிடைநும்மையும்வந்துமேவுவனம்பலஞ்சேர் *
மன்றங்கிடைமருதேகம்பம்வாஞ்சியமன்னபொன்னைச் *
சென்றங்கிடைகொண்டுவாடாவகைசெப்புதேமொழியே. ௨௬௮

ஆங்கவள்வயி னீங்கலுற்றவன்
இன்னுயிர்த்தோழிக்கு முன்னிமொழிந்தது.

(இ-ள்.) மின்போலுமிடையையுடையாய், இனிக்குன்றக்கிடைப்புக்களையுடைய சுரத்தையுங்கடந்துபோய், துமர்சொல்லு நிதியத்தைத்தேடிக்கொணர்ந்து, நம்மையும்வந்துமேவுவேன், தேமொழியினையுடையாய், நீசென்று அம்பலத்தைச்சேர்ந்த மன்னன்றங்கும் இடைமருது, ஏகம்பம், வாஞ்சியமாகிய இவற்றையொக்கும் பொன்னை, இடைகொண்டுவாடாதவண்ணம், அவ்விடத்துச் சொல்லவேண்டுவன சொல்லுவாயாக. எ-று.

குன்றக்கிடையென்பது - மெலிந்துநின்றதெனினுமமையும். நும்வயினென்பதூஉம்பாடம். எண்ணப்பட்டவற்றொடுபடாது அம்பலஞ்சேர்மன்னனெனக்கூறியவதனால், அம்பலமேயவர்க்கிடமாதல்கூறினார். இடைகொண்டென்புழி இடை - காலம். மெய்ப்பாடு-அச்சத்தைச்சார்ந்தபெருமிதம். பயன் - வரைபொருட்பிரியுந்தலைமகன் ஆற்றுவித்தல். (௨௬௮)

## நீயேகூறென்றல்.

நீயேகூறென்றலென்பது - பிரிவறிவிப்பக்கூறினதலைமகனுக்கு, நீயிரவுவரினும் பகற்பிரிந்துசெல்லையெனவுட்கொண்டு நின்னோடுகூடியவப்பொழுதும் யானுயிர்வாழேனென்றுநினைந்திருப்பாளுக்குத் தாழேனென்னுமுரைமுன்னாக நின்பிரிவை நீயே சொல்லிப் போவாயாகவென அவன் விரையவருவது காரணமாகத்தோழி தலைமகளதுபிரிவாற்றாமை கூறுநிற்றல். அதற்குச்செய்புள்.

கேழேவரையுமில்லோன்புலியூர்ப்பயில்கிள்ளையன்ன *
யாழேர்மொழிபாளிரவரினும்பகற்சேறியென்று *
வாழேனெனவிருக்கும்வரிக்கண்ணியைநீவருட்டித் *
தாழேனெனவிடைக்கட்சொல்லியேகுதனிவள்ளலே. (௨௬௪)

காய்கதிர்வேலோய் கனங்குழையவட் கு
நீயேயுரை நின்செலவென்ற து.

(இ-ள்.) ஒப்பில்லாதவள்ளலே, தனக்குவமையாக யாவரையுமுடையனல்லாதவனது புலியூர்க்கட்பயிலுங்கிளியையொக்கும் யாழோசைபோலுமொழியையுடையாள், இரவினீவரினும் பகற்பிரிந்துசெல்லையென்று அதனையேயுட்கொண்டு நின்னொடுகூடியவப்பொழுதும் யானுயிர்வாழேனென்றுநினைந்திருக்கும் வரிக்கண்ணினையுடையாளை வசமாக்கிப் பெற்றதோர்செவ்வியில் தாழேனென்னும் உரைமுன்னாக நின்பிரிவை நீயேசொல்லியேகுவாயாக. எ-று.

கிளி மென்மையும் மென்மொழியுடைமையும்பற்றி, மென்மொழியையுடையாட்குவமையாய்வந்தது. யாழோசை செவிக்கினிதாதல்பற்றி மொழிக்குவமையாய்வந்தது. புலியூர்ப்பயிலுமொழியாளெனவியையும். வாழேனெனவிருக்குமென்பதனைமுற்றாக்கி மொழிபாளிவ்வாறுசெய்யும் அவ்வரிக்கண்ணியை யென ஒருசுட்டுவருவித்துரைப்பினுமமையும். வருடி-வருட்டியெனமிக்குநின்றது. வாழேனெனவிருக்குமென்றதனான், இத்தன்மைத்தாகியவிவளது பிரிவாற்றாமையை மறவாதொழியவேண்டுமென்றாளாம். இடைக்கணென்றது - இவ்வொழுக்கத்தால் நினக்குவருமேதநினைந்து ஆற்றாளாஞ் செவ்விபெற்றென்றவாறு. வடிக்கண்ணியையென்பதூஉம்பாடம். மெய்ப்பாடு-அச்சம். பயன்-தலைமகளதாற்றாமையுணர்த்துதல். (௨௬௪)

## சொல்லாதேகல்.

சொல்லாதேகலென்பது-நீயேகூறென்றதோழிக்கு, யானெவ்வாறுகூறினும் அவள்பிரிவுடம்படாளாதலின் ஒருகாலும் வரைந்துகொள்கையில்லை யான்விரையவருவேன் அவ்வளவும் நீயாற்றுவித்துக்கொண்டிருப்பாயாகவெனக் கூறித் தலைமகன் றலைமகளுக்குச் சொல்லாதுபிரியாநிற்றல். அதற்குச்செய்யுள்.

வருட்டிற்றிகைக்கும்வசிக்கிற்றுளங்குமன்மகிழ்ந்து *
தெருட்டிற்றெளியலள்செப்பும்வகையில்லைசீரரக்கன் *
குருட்டிற்புகச்செற்றகோன்புலியூர்குறுகார்மனம்போன் *
றிருட்டிற்புரிகுழலாட்கெங்ஙனேசொல்லியேகுவனே. (௨௭௯)

நிரைவளை வர் ட
வுரையா தகன்ற து.

(இ-ள்.) நுதலுந்தோளு முதலாயினவற்றைத் தைவந்து ஒன்று சொல்லக்குறிப்பேனாயின், இஃதென்கருதிச் செய்கின்றாளென்று மயங்காநிற்கும்; இன்சொல்லின்வசித்து ஒன்று சொல்லலுறுவேனாயின், அக்குறிப்பறிந்து உண்ணடுங்காநிற்கும்; இனிவெளிப்படப்பிரிவுணர்த்திப் பொருண்முடித்துக் கடிதின்வருவலென்று கூறுற்றுத்தெளிவிப்பேனாயின், மன்மகிழ்ந்து அதனைத்தேருள், இவ்வாறொழிய அறிவிக்கும்வகை வேறில்லை, அதனாற் சுருண்டகுழலையுடையாட்குப்பிரிவை எவ்வண்ணஞ் சொல்லிப்போவேன்! ஒருவாற்றானுமரிது. எ-று. பெருமையையுடைய அருக்கன் குருடாகிய இழிபிறப்பிற் புகும்வண்ணம் அவனைவெகுண்டதலைவனது புலியூரையணுகாதார் மனம்போன்று இருட்டுதலையுடைய புரிகுழலெனக்கூட்டுக.

வருடினென்பது - வருட்டினென்னநின்றது. ஏகுவதேயென்பதூஉம்பாடம். மெய்ப்பாடு-அழுகை. பயன் - வரைவுமாட்சிமைப்படுத்துதற்குப்பிரிதல். (௨௭௯)

## பிரிந்தமைகூறல்.

பிரிந்தமைகூறலென்பது-தலைமகன், முன்னின்று பிரிவுணர்த்தமாட்டாமையிற் சொல்லாது பிரியாநிற்ப, தோழிசென்று, நமராற்றொடுக்கப்பட்ட வெல்லாநிதியத்தையும் ஒருங்குவரவிட்டு நின்னைவரைந்துகொள்வானாக அழற்கடநெறியே பொருள்தேடப்போனான், அப்போக்கு, அழற்கடஞ்சென்றமையான் நமக்குத்

துன்பமென்பேனோ வரைவுகாரணமாகப் பிரிந்தானாதலின் நம க்கின்பமென்பேனோவெனப் பொதுப்படக்கூறி,வரைவுகாரண மாகப் பிரிந்தானாதலின்,இது நமக்கின்பமேயெனத் தலைமகள் வ ருந்தாமல் அவன்பிரிந்தமைகூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

நல்லாய்நமக்குற்றதென்னென்றுரைக்கேனமர்தொடுத்த *
வெல்லாதிதியுடன்விடுப்பானிமையோரிறைஞ்சு *
மல்லார்கழலழல்வண்ணர்வண்டில்லைதொழார்களல்லாற் *
செல்லாவழற்கடமின்றுசென்றார்நஞ்சிறந்தவரே. (உளச)

தேங்கமழ் குழலிக்குப்
பாங்கி பகர்ந்தது.

(இ-ள்.) நமக்குச்சிறந்த அவர், நமராற்றொடுக்கப்பட்ட வெல் லாதிதியத்தையும் ஒருங்கேவரவிடுவான் வேண்டி,இமையோர்செ ன்றுவணங்கும் வளமார்ந்தகழலையுடைய அழல்வண்ணரது வள வியதில்லையைத்தொழாதாரல்லது நம்போல்வார்செல்லாத அழ லையுடையசுரத்தை இன்றுசென்றார். அதனான்,நல்லாய்,நமக்குவந் ததனை யாதென்றுசொல்லுவேன்! எ-று.

என்னென்றுரைக்கேனென்றதனான்,தொடுத்ததுவிடுப்பச்செ ன்றாராகலின் இன்பமென்பேனோ, அழற்கடஞ்சென்றமையாற் றுன்பமென்பேனோவெனப் பொதுப்படக்கூறுவாள்போன்று, வரைவுகாரணமாகப் பிரிந்தாராகலின் இது நமக்கின்பமேயென் றுற்றுவித்தாளாம். தொழார்களல்லார்செல்லாவென்றுபாடமோ துவாருமுளர். மெய்ப்பாடு-அழுகை. பயன் -வரைவுநீட்டியாமை யுணர்த்துதல். (உளச)

## நெஞ்சொடுகூறல்.

நெஞ்சொடுகூறலென்பது-பிரிந்தமைகூறக்கேட்டுவருந்தாநி ன்றநெஞ்சிற்கு, நமக்கேதம்பயக்குமொழுக்கமொழிந்து குற் றந்தீர்ந்தமுறைமையாகியவொழுக்கத்துப் பிரிந்தவிது நம்மை க்கெடுக்குமென்று நீகருதின் இதுவொழிய நமக்கின்புறுவாறு முபாயம் வேறுளதோவெனத் தலைமகள் அந்நெஞ்சினதுவருத் தந்தீரக்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

அருந்தும்விடமணியாமணிகண்டன்மற்றண்டர்க்கெல்லா *
மருந்துமமிர்தமுமாகுமுன்னோன்றில்லைவாழ்த்தும்வள்ள *
லிருந்துங்கடனெறிசெல்லுமிவ்வாறுசிதைக்குமென்றால் *
வருந்துமடநெஞ்சமேயென்னயாமினிவாழ்வகையே. (உளஉ)

கல்வரைநாடன் சொல்லாதக ல
மின்னொளிமருக்குறன்னொளிதளர்ந்தது.

(இ-ள்.) உண்ணப்பட்டநஞ்சநின்று அலங்காரமாய நீலமணி போலுங்கண்டத்தையுடையவன், தேவர்க்கெல்லாமுறுதியயக்கு மருந்தும் இன்சுவையையுடையவமிர்தமுமாகாநிற்கும்மூன்னோன், அவனதுதில்லையைவாழ்த்தும் நம்வள்ளல் நமக்கேதம்பயக்கு மொழுக்கமொழிந்து குற்றந்தீர்ந்திருக்குமுறைமையாகிய இந்நெறியைச்செல்கின்ற இந்தநீதி நம்மைக்கெடுக்குமென்று நீ சருதின், வருந்துகின்றவறிவில்லாதநெஞ்சமே, பாமின்புத்துவாழுமுபாயம் வேறியாது! எ-று.

அருந்துமென்பது-காலமயக்கம். அருந்துதற்றொழின்முடிவதன்முன் நஞ்சங்கண்டத்து நிறுத்தப்பட்டணியாயிற்றாகலின், நிகழ்காலத்தாற்கூறப்பட்டதெனினுமமையும். மற்று-அசைநிலை. திருந்துங்கடனெறியென்பது- தித்திக்குந்தேனென்பதுபோல இத்தன்மைத்தென்னுநிகழ்காலம்படநின்றது. திருந்துங்கடனெறியைச்செல்லுமென்றும், களவாகியவிவ்வாற்றைச் சிதைக்குமென்றும், மூற்றாக அறுத்துரைப்பாருமுளர். (உஎஉ)

## நெஞ்சொடுவருந்தல்.

நெஞ்சொடுவருந்தலென்பது- பிரிந்தமைகூறக்கேட்ட தலைமகள், அன்றவரைவிடாது என்னைவிட்டு அவரதுதேர்ப்பின் சென்றநெஞ்சம் இன்றுமவ்வாறுசெய்யாது என்னைவருத்தாநின்றதெனத் தன்னெஞ்சொடுவருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்.

ஏர்ப்பின்னைதோண்முன்மணந்தவனேத்தவெழிநிகழுஞ் *
சீர்ப்பொன்னைவென்றசெறிகழலோன்றில்லைச் சூழ்பொழில்வாய்க்
கார்ப்புன்னைபொன்னவிழ்முத்தமணலிற்கலந்தகன்றார் *
தேர்ப்பின்னைச்சென்றவென்னெஞ்சென்கொலாமின்றுசெய்கின்றதே

வெற்ப லீங்க ப்
பொற்பு வரடிய து.

(இ-ள்.) அழகையுடைய பின்னையென்கின்றதேவியுடையதோள்களை முற்காலத்துக் கலந்தமாயோன்நின்றுபரவஎழில்விளங்குஞ்செம்பொன்னைவென்ற திருவடிகளையுடையவனது தில்லைக்கட் சூழ்ந்தபொழிலிடத்துக் கரியபுன்னை பொன்போல மலராநின்ற முத்துப்போலு மணலையுடையதோரிடத்துக் கூடி நீங்கினவர்

து தேர்ப்பின்சென்றவென்னெஞ்சம் இவ்விடத்தின்றுசெய்கின்றதென்னே! அறிகின்றிலேன். எ-று.

ஏத்தவெழிறிகழுமெனவியையும். என்னோடுநில்லாது அவர் தேர்ப்பின்போனநெஞ்சம் இன்றென்னைவருத்துகின்ற விஃதென்னென்று நெஞ்சொடுநொந்துகூறினளாகவுரைப் பினுமமையும். செறிகழலும்,மூத்தமணலும், அன்மொழித்தொகை. தேய்கின்றதேயென்பதுபாடமாயின், அன்றவரை விடாதுசென்றநெஞ்சம் செல்லாதுஈண்டிருக்குமென்னைப்போல் இன்றுதேய்கின்றதென்னென்று கூறினளாகவுரைக்க. இவையிரண்டற்கும்மெய்ப்பாடு-அழுகை. பயன்-ஆற்றாமைநீங்குதல். (உஎ௩)

## வருத்தங்கண்டுரைத்தல்.

வருத்தங்கண்டுரைத்தலென்பது-தலைமகள் தன்னெஞ்சொடுவருந்தாநிற்பக் கண்டதோழி,இத்தன்மைத்தாகிய வெற்பாகலிற்றாழாதுவிரையவவரொடுவருவர், ஆதலால் நீயின்னாமையையடையாதொழிவாயாகவென்று அவள்வருத்தந்தீரக்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

கானமர்குன்றர்செவியுறவாங்குகணைதுணையா *
மானமர்நோக்கியர்நோக்கெனமானற்றொடைமடக்கும் *
வானமர்வெற்பர்வண்டில்லையின்மன்னைவணங்கலர்போற் *
றேனமர்சொல்லிசெல்லார்செல்லல்செல்லதிருநுதலே. (உஎ௪)

அழலுறுகோதையின் விழுமுறுபேதை ஐய
நீங்கலெனப் பாங்கிபகர்ந்த து.

(இ-ள்.) தேனைப்பொருந்துஞ்சொல்லையுடையாய்,கானின்கணமருங்குன்றவர் செவியுறும்வண்ணம் வலித்த கணையைத் தாமெய்யக்குறித்தவற்றினோர்க்குந் தந்துணைவியராகிய மானைப்பொருந்திய நோக்கத்தையுடையவரது நோக்கோடொக்குமென்று கருதி அம்மானைக்குறித்த நல்லதொடையைமடக்குமுகிறங்கும் வெற்பர் செல்கின்றாரல்லர்,வளவியதில்லையின்மன்னனை வணங்காதாரைப்போல,திருநுதால்,இன்னாமையையடையாதொழிவாய். எ-று.

தொடைமடக்குமென்னுஞ்சொற்கள் இயைந்து ஒருசொல்லாய்க் குன்றவரென்னுமெழுவாய்க்குங் கணையையென்னுமிரண்டாவதற்கும்முடிபாயின. துணையாமென்பது "ஏவலிளையர்தாய்,,என்பதுபோல மயக்கமாய்நின்றது. மானமர்நோக்கியர் நோக்கென்பதனை உறழ்வாலுவமைப்பாற்படுக்க. கொலைத்தொழிலாளருந் த

ந் துணைவியரோடொப்பனவற்றிற்கு மிடர்செய்யாதவேற்பாதலின், நீயிவ்வாறுவருந்த நீட்டியாரென்பது கருத்து. (உஎச)

## வழியொழுகிவற்புறுத்தல்.

வழியொழுகிவற்புறுத்தலென்பது- தலைமகளது வருத்தங்கண்டதோழி, அவளைவழியொழுகியாற்றுவிக்க வேண்டுமளவாகலின், ஆற்றாமைக்குக்காரணமாகியவற்றைக்கூறித் தானும் அவளோடு வருத்தமுற்று, அதுகிடக்க இம்மலர்ப்பாவையையன்னாட்கு இவ் வேறுபாடுவந்தவாறென்னோவென்று அயலவர் ஐயுறாநிற்பாதலான் நீயாற்றவேண்டுமென்று அவள்வழியொழுகிவற்புறுத்தாநிற்றல். அதற்குச்செய்யுள்.

மதுமலர்ச்சோலையும்வாய்மையுமன்புமருவிவெங்கான் *
கதுமெனப்போக்குநிதியினருக்குமுன்னிக்கலுழ்ந்தா *
னொதுமலர்நோக்கமொர்மூன்றுடையோன்றில்லைநோக்கலர்போ
லிதுமலர்ப்பாவைக்கென்னோவந்தவாறென்பரேந்திழையே. ()

சூழிருங் கூந்தலை த்
தோழி தெருட்டிய து.

(இ-ள்.) அவரைப்புதுவதுகண்ணுற்ற மதுமலரையுடையசோலையையும், அன்று நின்னிற்பிரியேன் பிரியினாற்றேனென்றுகூறிய வஞ்சினத்தினது மெய்ம்மையையும், வழிமுறைபெருகியவன்பையும், நம்மோடுமருவிவைத்துப் பின்கதுமென வெங்கானிற்போகியபோக்கையும், போய்த்தேடுநிதியினது செய்தற்கருமையையும், நினைந்து நீகலுழ்ந்தால், ஏந்திழாய், ஏதிலர், மலர்ப்பாவையன்னாட்கு இவ்வேறுபாடுவந்தவாறென்னோவென்றையுறுவர், அதனானீயாற்றுவாயாக. எ-று. கண்களொருமூன்றையுடையவனது தில்லையைக்கருதாதார்போல வந்தவாறென்னோவெனக்கூட்டுக.

அன்பு-வழிமுறையாற்சுருங்காது கடிதுசுருங்கிற்றென்னுங்கருத்தாற் கதுமெனப்போக்குமென்றாள். அருக்குமென்றதனால் நீட்டித்தல்கருதினாளாம். வழியொழுகியாற்றுவிக்கவேண்டுமளவாகலின், ஆற்றாமைக்குக்காரணமாகியவற்றை மிகுத்துக்கூறினாளாம். இவையிரண்டற்கும் மெய்ப்பாடு-இளிவரலைச்சார்ந்தபெருமிதம். பயன்-தலைமகளையாற்றுவித்தல். (உஎரு)

## வன்புறையெதிரழிந்திரங்கல்.

வன்புறையெதிரழிந்திரங்கலென்பது, வழியொழுகிவற்புறுத்தினதோழியோடு, தலைமகன்வரைவுநீடுதலாற் றமக்கோர்பற்றுக்

கோடின்றிவருந்துந் திருவினையுடையார்க்கு அவன்வரைவுமிஃவ
யினிது யானுற்றேனெனத் தலைமகள் வன்புறையெதிரழிந்திரங்
காநிற்றல். அதற்குச்செய்யுள்.

வந்தாய்பவரையில்லாமயின்முட்டையிளையமந்தி *
பந்தாடிரும்பொழிற்பல்வரைநாடன்பண்போவினிதே *
கொந்தார்நறுங்கொன்றைக் கூத்தன்றென்றில்லை தொழார்குழுப்
போற்,சிந்தாகுலமுற்றுப்பற்றின்றிநையுந்திருவினர்க்கே. உஎகூ

வஞ்சுறைவேலோன் வரைவுநீ ட
வன்புறையழிந்தவண் மனமழுங்கிய து.

(இ-ள்.) கொத்தார்ந்த நறியகொன்றையையணிந்தகூத்தனது
தெற்கின்கணுண்டாகிய தில்லையைவணங்காதார துகிரள்போல ம
னக்கலக்கத்தையுற்றுத் தமக்கோர்பற்றுக்கோடின்றிவருந்துந் தி
ருவினையுடையவர்க்கு, சென்றாராய்வாரையுடைத்தல்லாத மயிலி
ன்முட்டையை இளையமந்தி பந்தாடிவிளையாடும் பெரியபொழி
லையுடையபலவாகிய வரைகளையுடைய நாட்டையுடைய வனதியல்
போ,இனிது. எ-று.

நையுத்திருவினர்க்கென்றது நையுந்துணையாயிறந்துபடாதி
ருந்து அவனளிபெற்றனான்று இஃபுறவெய்தும் நல்வினையா
ட்டியர்க்கென்றவாறு. எனவே, யானதுபெறுமாறில்லையென்று
ளாம். உற்றதாராய்ந்தோம்புவாரில்லாத மயிலினதுமுட்டையால்
ஞன்றவருத்தமறியாதவிளமந்தி, மயிலின்வருத்தமும் முட்டையி
ன்மென்மையும் பாராது பந்தாடுகின்றாற்போலக் காதலரான்வி
னவப்படாத என்காமத்தை நீயிஃதுற்றறியாமையான் எனதுவ
ருத்தமும் காமத்தினது மென்மையும் பாராது, இவ்வாறுரைக்கி
ன்றாயென உள்ளுறைவகையாற் றோழியைநெருங்கி வன்புறை
யெதிரழிந்தவாறு கண்டுகொள்க. அல்லதூஉம், வந்தாய்பவர்தோ
ழியாகவும், இளமந்தி தலைமகனாகவும், பந்தாடுதல் தலைமகளதுவ
ருத்தம்பாராது தான்வேண்டியவரசெழுகுமவனதொழுக்கமாக
வும்,உளப்பினுமமையும். திருவினெற்கேயென்பதுபாடமாயி
ன், இவ்வாறு வஞ்சகன்மையேனுப் வாழுந்திருவையுடையேற்கெ
னவுரைக்க. இதற்குத்திரு-ஆகுபெயர். மெய்ப்பாடு-அழுகையை
ச்சார்ந்தபெருமிதம். பயன்-அது. (உஎகூ)

## வாய்மைகூறிவருத்தந்தணித்தல்.

வாய்மைகூறிவருத்தத்தணித்தலென்பது- வரைவுநீடுதலான் வ

ன்புறையெதிரழிந்துவருந்தாநின்றதலைமகளுக்கு, அவர்சொன்ன வார்த்தை நினக்குப்பொய்யென்பதேகருத்தாயின், இவ்வுலகத்து மெய்யென்பது சிறிதுமில்லையெனத் தோழி தலைமகனது வாய்மைகூறி, அவள்வருத்தந்தணியாநிற்றல். அதற்குச்செய்யுள்.

மொய்யென்பதேயிழைகொண்டவனென்னைத்தன்மொய்கழற்காட்
செய்யென்பதேசெய்தவன்றில்லைச்சூழ்கடற்சேர்ப்பர்சொல்லும்
பொய்யென்பதேகருத்தாயிற்புரிகுழற்பொற்றொடியாய் *
மெய்யென்பதேதுமற்றில்லைகொலாமிவ்வியவிடத்தே. (உஎஎ)

வேற்றடங் கண்ணி யை
யாற்று வித்த து.

(இ-ள்.) வலிமையையுடைய என்பதனையே தனக்கணியாகக் கொண்டவன், என்னைத் தன்னுடைய வலியதிருவடிகட்காட்செய்யென்று வெளிப்பட்டுநின்று சொல்லுதலையேசெய்தவன், அவனது தில்லைவரைப்பினுண்டாகிய சூழ்ந்தகடலையுடைத்தாகிய சேர்ப்பையுடையவரது சொல்லும் பொய்யென்பதே நினக்குக்கருத்தாயின், சுருண்டகுழலையுடையபொற்றொடியாய், இவ்வுலகத்து மெய்யென்பது சிறிதுமில்லைபோலும். எ-று.

அரிமுதலாயினவொன்பாகலின், மொய்யென்பென்றார். இழித்தனை கைக்கொள்வானாகலின், என்னையணியாகவும் என்னையடிமையாகவுங்கொண்டானென்பது கருத்து. மெய்ப்பாடும் பயனும்- அவை. (உஎஎ)

## தேறாதுபுலம்பல்.

தேறாதுபுலம்பலென்பது- தலைமகனது வாய்மைகூறிவருத்தந்தணியாநின்றதோழிக்கு, யானவர்கூறியமொழியின்படியே மெய்ம்மையைக்கண்டுவைத்தும், என்னெஞ்சமுநிறையும் என்வயமாய்நிற்கின்றனவில்லை, அதுவேயுமன்றி, என்னுயிரும் பொறுத்தற்கரிதாகாநின்றது, இவையிவ்வாறாதற்குக்காரணம் யாதென்றறிகின்றிலேனெனத் தான்றேறாமைகூறிப்புலம்பாநிற்றல். அதற்குச் செய்யுள்.

மன்செய்தமுன்னாண்மொழிவழியேயன்னவாய்மைகண்டு *
மென்செய்தநெஞ்சநிறையுநில்லாவெனதின்னுயிரும் *
பொன்செய்தமேனிபன்றில்லையுறாரிற்பொறையரிதா *
முன்செய்ததீங்குகொல்காலத்துநீர்மைகொல்மொய்குழலே. ()

தீதறுகண்ணி தேற்றத்தேறா து
போதுறுகுழலி புலம்பிய து.

(இ-ள்.) மொய்த்தகுழலையுடையாய், முற்காலத்து மன்னன் நமக்குதவியமொழிபின்படியே அத்தன்மைத்தாகியமெய்ம்மையைக்கண்டுவைத்தும், என்னெஞ்சமுநிறையுமென்வசமாயவாய் நிற்கின்றில, இவையென்செய்தன! அதுவேயுமன்றி, எனதினியவுயிரும்பொன்னையொத்தமேனியையுடையவனது தில்லையையுறாதாரைப்போல வருத்தம்பொறுத்தலரிதாகாநின்றது, இவையிவ்வாறாதற்குக்காரணம் யான்முன்செய்ததீவினையோ? அன்றிப் பிரியுங்காலமல்லாதவிக்காலத்தினியல்போ? அறிகின்றிலன். எ-று.

மொழிவழியேகண்டுமெனவினையும். நெஞ்சநில்லாமையாவது-நம்மாட்டு அவரதன்பு எத்தன்மைத்தோவென்றையப்படுதல். நிறைநில்லாமையாவது-பொறுத்தலருமையான் அந்நோய் புறத்தார்க்குப்புலனாதல். நில்லாவென்பதுபாடமாயிற் றனித்தனிகூட்டுக. பொன்செய்தவென்புழிச்செய்தவென்பது-உவமச்சொல். உயிர் துன்பமுழத்தற்குக் காரணமாதலின், அதனையுந் துன்பமாகநினைத்து இன்னுயிரும்பொறையரிதாமென்றாள். மெய்ப்பாடு-மருட்கை. பயன்-ஆற்றுதல். (உஎஅ)

## காலமறைத்துரைத்தல்.

காலமறைத்துரைத்தலென்பது- தேறாமைகூறிப்புலம்பாநின்ற தலைமகள், காந்தள்கருவுறக்கண்டு, இஃதவர்வரவுகுறித்தகாலமென்று கலங்காநிற்ப, நம்முடையவையன்மார் தினைக்கதிர்காரணமாகக் கடவுளைப்பராவ, அக்கடவுளதாணையாற் காலமன்றியுங் கார்நீரைச்சொரிய, அதனையறியாது, காலமென்று இக்காந்தண்மலர்ந்தன நீயதனைக்காலமென்று கலங்கவேண்டாவெனத் தோழி, அவளையாற்றுவித்தற்குக்காலமறைத்துக்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

கருந்தினையோம்பக்கடவுட்பராவிநமர்கலிப்பச் *
சொரிந்தனகொண்மூச்சுரந்ததன்பேரருளாற்றொழும்பிற் *
பரிந்தெனையாண்டசிற்றம்பலத்தான்பரங்குன்றிற்றுன்றி *
விரிந்தனகாந்தள்வெருவரல்காரெனவெள்வளையே. (உஎகூ)

காந்தள்கருவுறக் கடவுண்மழைக்கெ ன்
றேந்திழைப்பாங்கி யினிதியம்பிய து.

(இ-ள்.) வெள்வளையையுடையாய், கரியதினையையோம்பவேண்டிக் கடவுளைப்பராவி நமராரவாரிப்ப, அக்கடவுளாணையாற்கொ

ண்முகில்கள் காலமன்றியுநீரைச்சொரிந்தன, அதனைக்காரென்றுகருதி, இப்பரங்குன்றின்கட்காந்தளொருங்கியலர்ந்தன, அதனாற் நீகாரென்றஞ்சவேண்டா. எ-று. பொறுத்தற்கரிதாகச்சுரந்த தனதுபெரியவருளால் அடிமைக்குத் தகாதவெம்மைத் தன்னடிமைக்கண்ணேகூட்டி நிவுநிலைமையின்றிப் பரிந்தாண்டசிற்றம்பலத்தானது பரங்குன்றினெனக்கூட்டுக.

கடவுண்மழை-கடவுளாற்றரப்பட்டமழை. மெய்ப்பாடு-பெருமிதம். பயன்-ஆற்றுவித்தல். (௨௭௯)

## தூதுவரவுரைத்தல்.

தூதுவரவுரைத்தலென்பது - காலமறைத்தசோழி, ஒருதூதுவந்துதோன்றுநின்றது, அஃதின்னார் தூதென்று தெரியாதெனத் தானிப்புறமேயோடுநின்று அவள் மனமகிழும்படி தலைமகளுக்குத் தூதுவரவுரையாநிற்றல். அதற்குச்செய்புள்.

வென்றவர்முப்புரஞ்சிற்றம்பலத்துநின்றும்வெள்ளிக் *
குன்றவர்குன்றுவருடராக்கூடினர்நம்மகன்று *
சென்றவர்தூதுகொல்லோவிருந்தேமையுஞ்செல்லல்செப்பா *
நின்றவர்தூதுகொல்லோவந்துதோன்றுநிரைவளையே. (௨௮௰)

ஆங்கொரு தூதுவரப்
பாங்கிகண் டுரைத்தது.

(இ-ள்.) நிரைவளையையுடையாய், ஒருதூதுவந்துதோன்றுநின்றது, இது குன்றுத அருள்கொணர்ந்துதர வந்துகூடிப் பின்னம்மைப்பிரிந்துசென்றவர் தூதோ? அன்றி அவர்பிரியவிருந்தோமிடத்தும் இன்னுமையைச் சொல்லாநின்றவேதிலார்தூதோ? அறியேன் எ-று. முப்புரத்தைவென்றவர், சிற்றம்பலத்தின்கணின்றும் வெள்ளிக்குன்றையுடையவர், அவரது குன்றுதவருவெனக்கூட்டுக.

கூடினரென்பது- பெயர்படநின்றதெனினுமமையும். இருந்தேமையென்னுமிரண்டாவது ஏழாவதன் பொருட்கண்வந்தது. இரண்டாவதாயேநின்று இன்னுமையைச் சொல்லாநின்றவரென்னுந்தொழிற்பெயரோடுமுடிந்ததென்பாருமுளர். ஆங்கொருதூது - ஏதிலார்தூது. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்தமருட்கை. பயன்- ஐயந்தீர்தல். (௨௮௰)

## தூதுகண்டழுங்கல்.

தூதுகண்டழுங்கலென்பது-தூதுவரவுஉரைப்பக்கேட்ட தலைமகள் மனமகிழ்வோடுநின்று, இஃதயலார்தூதாகலான் இவைவருவனசெல்வனவாகாநின்றன,காதலர்தூது இன்றுவாராதிருக்கின்றது என்செய்யக்கருதியென்றறிகின்றிலேனென்று ஏதிலார்தூதுகண்டழுங்காநிற்றல். அதற்குச்செய்யுள்.

வருவனசெல்வனதூதுகளேதிலவான்புலியூ *
ரொருவனதன்பரின்பக்கலவிகளுள்ளுருகத் *
தருவனசெய்தெனதாவிகொண்டேகியென்னெஞ்சிற்றம்மை *
யிருவினைகாதலரேதுசெய்வானின்றிருக்கின்றதே. (உ௲௯)

அயலுற்ற தூதவர
வயலுற்றகண்ணி மயலுற்றது.

(இ-ள்.) ஏதிலவாகிய தூதுகள் வருவன போவனவாயிராநின்றன,வானிற்புலியூர்க்கணுளனாகிய ஒப்பிலாதானது அன்பையுடையவரைப்போல யானின்புறவுள்ளுருகும்வண்ணந் தரப்படுவனவாகிய இன்பக்கலவிகளை முன்செய்து,பின்னெனதாவியைத் தாங்கொண்டுபோய் என்னெஞ்சத்தின்கட் டம்மையிருத்தினகாதலர்,இன்றுவாளாவிருக்கின்றது ஏதுசெய்யக்கருதி? எ-று.

ஒருவனதன்பு- ஒருவன்கணன்பு உள்ளுருகத்தருவனவென்பதற்கு உள்ளுருகும்வண்ணஞ்சிலவற்றைத்தருவனவாகியகலவியென்றுரைப்பினுமமையும். தன்மெய்யன்பர்போல யானுமின்புறவுள்ளுருகுக்கலவிகளை முன்செய்து பின்னெனதாவி போயினுற்போலத் தாம்பிரிந்துபோய் ஒருஞான்றுங்கட்புலனாகாது யானினைந்து வருந்தச் செய்தகாதலர் இன்று ஏதுசெய்யவிருக்கின்றுரென வேறுமொருபொருடோன்றியவாறுகண்டுகொள்க. அயல்-அயன்மை. மெய்ப்பாடும் பயனும்-அவை. (உ௲௯)

## மெலிவுகண்டுசெவிலிகூறல்.

மெலிவுகண்டுசெவிலிகூறலென்பது-ஏதிலார்தூதுகண்டழுங்காநின்றதலைமகளைச் செவிலியெதிர்ப்பட்டு, அடியிற்கொண்டு முடிகாறுநோக்கி, இவள்பண்டைத்தன்மையளல்லள், இவ்வாறு மெலிதற்குச் செயினதரட்சியித்பட்டனள்போலு மென்றறிகின்றிலேனென்று அவளதுமெலிவுகண்டுகூறாநிற்றல், அதற்குச்செய்யுள்.

வேயினமென்றோண்மெலிந்தொளிவாடிவிழிபிறிதாய்ப் *
பாயினமேகலைபண்டையளல்லள்பவளச்செவ்வி *
யாயினவீசனமரர்க்கமரன்சிற்றம்பலத்தான் *
சேயினதாட்சியிற்பட்டனளாலித்திருத்திழையே. (௨௮௨)

வண்டமர்புரிகுழ லொண்டொடி மெலிய
வாடாநின்ற கோடாய்கூறியது.

(இ-ள்.) வேய்க்கினமாகிய மென்றோண்மெலிந்து கதிர்ப்புவாடிவிழி தன்னியல்பிழந்து வேறுப்பப் பாந்தமேகலையையுடையாள் பண்டைத்தன்மையளல்லளாயினாள், அதனால் இத்திருந்திழை சேயினதாட்சியாகியவிடத்துப்பட்டாள்போலும். எ-று. திருமேனி பவளத்தினது செவ்வியாகியவீசன், தேவர்க்குத்தேவன், சிற்றம்பலத்தின்கண்ணான், அவனுடையசேயெனக்கூட்டுக.

ஒளிவாடியென்பதூஉம், விழிபிறிதாயென்பதூஉம், சினைவினைப்பாற்படும். பாயினமேகலையென்னுஞ்சொற்கள் ஒருசொல்நீர்மைப்படுதலின், ஆகுபெயரெனப்படும். செவ்வி-கருகுதலும்வெளுக்குதலுமில்லாதநிறம். ஆட்சி - அவனதாணையான் மக்களுக்கணையலாகாதவிடம். (௨௮௨)

## கட்டுவைப்பித்தல்.

கட்டுவைப்பித்தலென்பது-மெலிவுகண்டசெவிலி, அவளுறுபருவங்கூறி, இவ்வணங்குற்றநோயைத் தெரியவறிந்துசொல்லுமினெனக் கட்டுவித்திக்குரைத்துக் கட்டுவைப்பியாநிற்றல். அதற்குச்செய்யுள்.

சுணங்குற்றகொங்கைகள்சூதுற்றிலசொற்றெளிவுற்றில *
குணங்குற்றங்கொள்ளும்பருவமுறாள்குறுகாவசுரர் *
நிணங்குற்றவேற்சிவன்சிற்றம்பலநெஞ்சுறாதவர்போ *
லணங்குற்றநோயறிவுற்றுரையாடுமினன்னையரே. (௨௮௩)

மால்கொண்ட கட்டுக்
கால் கொண்டது.

(இ-ள்.) சுணங்கைப்பொருந்தியகொங்கைகள் சூதின்றன்மையையுற்றனவில்லை, சொற்கள் குதலைமைநீங்கி விளங்குதலையுற்றனவில்லை, நன்மையுந்தீமையுமறியும் பெதும்மையைப் பருவத்தையிப்பொழுதைக்குறாள். இவளிளமை இதுவாயிருந்தது. அன்னைமீர், இவ்வணங்குற்றநோயைத் தெளியவறிந்துசொல்லுவீராமின்.

எ-று. சென்றுசேராதவளாருடைய நிணத்தைக்குற்றசூலவேலையுடையசிவனது சிற்றம்பலத்தை நெஞ்சாலுறாதாரைப்போல அணங்குற்றவெனக்கூட்டுக.

இளமைகூறியவதனாற் பிறிதொன்றுசிந்திக்கப்பட்டாளென்பது கூறினாளாம். இவையிரண்டற்கும் மெய்ப்பாடு-மருட்கை. பயன்-தலைமகட்குற்றதுணர்த்தல். (உஅந)

## கலக்கமுற்றுநிற்றல்.

கலக்கமுற்றுநிற்றலென்பது - செவிலிகட்டுவைப்பியாநிற்ப, இவளுள்ளமோடியவாறுமுழுதையும் புலப்படுத்தி, நம்மை வருத்தி, அயலார் அன்று மொழியாத பழியையும் வெளிப்படச்சொல்லி, எம்மிடத்துண்டாகிய நாணினையுந்தள்ளி, எங்குடியினையுங் குற்றப்படுத்தியல்லவே இக்கட்டுவித்தி நிற்கப்புகுகின்றதெனத் தோழி கலக்கமுற்று நில்லாநிற்றல். அதற்குச்செய்யுள்.

மாட்டியன்றேயெம்வயிற்பெருநாணினிமாக்குடிமா *
சூட்டியன்றேநிற்பதோடியவாறிவளுள்ளமெல்லாங் *
காட்டியன்றேநின்றதில்லைத்தொல்லோனைக்கல்லாதவர்போல் *
வாட்டியன்றோர்குழலார்மொழியாதனவாய்திறந்தே. (உஅச)

தெய்வத்திற் றெரியுமெ ன
எவ்வத்தின் மெலிவுற்ற து.

(இ-ள்.) இவளுள்ளமோடியவாறு முழுதையும் புலப்படுத்தி, அன்றுதொட்டுநின்ற தில்லைக்கணுள்ளாகிய பழையோனைக் குருமுகத்தாலறியாதாரைப்போல வருந்த நம்மைவாட்டி, அலர்தூற்றி அவ்வேர்குழலாராகியவயலார் அன்றுமொழியாத பழியையும் வெளிப்படச்சொல்லி, இப்பொழுதெம்மிடத்துண்டாகியபெருநாணினை மாள்வித்தல்லவே, எம்பெருங்குடியைக் குற்றப்படுத்தியல்லவே இக்கட்டுவித்திநிற்பது, இனியென்செய்தும்! எ-று.

மூள்வித்தற்கண் மூட்டியெனநின்றவாறுபோல மாள்வித்தற்கண் மாட்டியெனநின்றது. தள்ளியென்னும்பொருள் படநின்றதென்பாருமுளர். நிற்பதென்றதனை முன்னையதனோடுங் கூட்டுக. இவளென்றது கட்டுவித்தியையென்று, இவணிற்பதெனக்கூட்டித் தலைமகள்கூற்றாகவுரைப்பினுமமையும். தில்லைக்கணின்றநாள் இந்நாளென்றுணரலாகாமையின், அன்றேநின்றவென்றார். தெய்வம்-கட்டுக்குரியதெய்வம். மெய்ப்பாடு- இளிவரல். பயன் - அறத்தொடுநிற்றற்கொருப்படுத்தல். (உஅரு)

## கட்டுவித்திகூறல்.

கட்டுவித்திகூறலென்பது- தோழிகலக்கமுற்றுநில்லாநிற்ப, இருவரையுநன்மையாகக்கூட்டுவித்ததெய்வம் புறத்தார்க்கிவ்வொழுக்கம்புலப்படாமல் தானிட்டநெல்லின்கண் முருகனைக்காட்ட, இதனையெல்லீருங்காண்மின், இவளுக்குமுருகனையொழியப்பிறிதொன்றுமில்லையெனக் கட்டுவித்தி நெற்குறி காட்டிக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

குயிலிதன்றேயென்னலாஞ்சொல்லிகூறன்சிற்றம்பலத்தா *
னியலிதன்றேயென்னலாகாவிறைவிறற்சேய்கடவு *
மயிலிதன்றேகொடிவாரணங்காண்கவன்சூர்தடிந்த *
வயிலிதன்றேயிதன்றேநெல்லிற்றோன்றுமவன்வடிவே. (உ௮௩)

கட்டுவித்　　தி
விட்டுரைத்　து.

(இ-ள்.) இது குயிலோசையாமென்று சொல்லலாகுஞ் சொல்லையுடையவளது கூற்றையுடையான், சிற்றம்பலத்தின்கண்ணான், அவனது தன்மையிதுவாமென்றுகூறமுடியாதவிறைவன், அவனுடைய விறலையுடையசேயூருமயிலிதுவல்லவே, அதுவேயுமன்றி, அவன்கொடிக்கணுள்ளதாகிய கோழியையும் எல்லீருங்காண்க, அதுவேயுமன்றி, வலியனாகியசூரனைக்குறைத்த அயில்தானிதுவல்லவே, இவையெல்லாஞ்சொல்லுகின்றதென்! இப்பரப்பிய நெல்லின்கண்வந்துதோன்றுகின்றது அவனதுருவமாம், இதுவல்லவேகாண்மின். எ-று.

முருகனென்னவே, முருகனங்கினானென்றுகூறினாளாம். சூர் மாமரமாய்நின்றமையாற்றடிந்தவென்றாள். மெய்ப்பாடு- பெருமிதம். பயன்- தன்கருமமுற்றுதல். கட்டுவித்தியைவினவ, அவளறியாதாள்போல இக்கருமமுடித்தற்பொருட்டிவ்வகைசொன்னாள். என்னை, வரைபொருட்குத்தலைமகன்போக, அவன்வரவுநீட்டித்தலான், இவள்தாற்றாமையானுண்டாகியநோயை முருகனால்வந்ததென்றிவள்கூறலாமோ, இஃதங்ஙனமாயிற் குறியென்பதனைத்தும்பொய்யேயாமென்பதுகடா. அதற்குவிடை, குறியும்பொய்யன்று, இவளும்பொய்கூறினாளல்லள், அஃதெங்ஙனமெனின்- குறிபார்க்கச்சென்றிருக்கும்பொழுதே தெய்வமுன்னிலையாகக்கொண்டிருத்தலான், அத்தெய்வத்தின்வெளிப்பாட்டானே தலைமகனுடன்புணர்ச்சியுண்மையையறிந்தாள், இவளிங்ஙனமறிந்தாளென,

ன்பதனை நாமறிந்தவாறியாதனெனின், இக்களவொழுக்கந்தெய்வமிகுதி நிற்பப்பான்மை வழியோடு நடக்குமொழுக்கமாதலானும், சிற்றம்பலத்தானியல்பு தெரிந்திராதேயென்றிவள் சொல்லுதலானும், அறிந்தாம். இப்படிவருமொழுக்கம் அகத்தமிழொழுக்கமென்பதனைமுதுபெண்டிருமறிந்துபோதலையானும், இவளுரைக்கின்றழி முதுபெண்டிணாமுகநோக்கியே சிற்றம்பலத்தானியல்புதெரியாதெனவுணர்த்தாள், அவருமக்கருத்தேபற்றியும் அதனையுணர்ந்தார், இக்கருத்தினானாமறியப்பட்டது. இனியயலானாயுஞ்சுற்றத்தாராயுநீக்கவேண்டுகையாலும், இக்களவொழுக்கருமடியுமிடத்து வேலனைக்கூவுகையும், வெறித்தொழில்கொள்கையும், அவ்வெறித்தொழிலையறத்தொடுநின்றுவிலக்குகையும், அகத்தமிழிலக்கணமாலையின், முருகணங்கென்றே கூறப்பட்டது. கூறியவாறுவது- குறிக்கிலக்கணம் நெல்லுமன்றுமிரண்டுமொன்றும்படுகை. அஃதாவது- அடியுங்கொடியுமுவமையும். இதனில், அடியாவது மயில், கொடியாவது கோழி, உவமையாவது வேல். ஆதலான் முருகணங்கெனவே கூறப்பட்டதெனவறிக. ()

## வேலனையழைத்தல்.

வேலனையழைத்தலென்பது- கட்டுவித்திமுருகணங்கென்று கூறக்கேட்டு, இப்பாலனிக்குடியின்கட்பிறந்து நம்மையிவ்வாறு நிற்பித்தபண்பினுக்கு வேலன்புகுந்து வெறியுமாடுக, அதன்மேன் மறியுமறுக்கவெனத் தாயர் வேலனையழையாநிற்றல். அதற்குச் செய்யுள்.

வேலன்புகுந்துவெறியாடுகவெண்மறியறுக்க
காலன்புகுந்தவியக்கழல்வைத்தெழிற்றில்லைநின்ற
மேலன்புகுந்தென்கணின்றனிருந்தவெண்காடனையு
பாலன்புகுந்திப்பரிசினினிற்பித்தபண்பினுக்கே. (௨௮௯)

வெறியாடிய வேலனைக்கூஉ- ய்
தெறியார்குழலி தாயர்நின்ற னர்.

(இ-ள்.) தன்னையடைந்தவந்தணனை எதஞ்செய்யக்குறித்து அவ்விடத்துப்புகுந்தகாலன்வலிகெட ஒருகழலைவைத்து எழிலையுடையதில்லைக்கணின்ற எல்லாப்பொருட்குமேலாயுள்ளான், புகுந்தணியனாயென்னிடத்துநின்றவன், அவனிருந்த வெண்காட்டையொக்கும் இப்பிள்ளையிக்குடியிற்பிறந்து வெறியாடுவித்தலையுமிம்முறைமைக்கணும்மை நிற்பித்தபண்பால், வேலனீண்டுப்புகுந்துவெறியாடுவானாக, பலியாக வெள்ளியமறியையுமறுக்க. எ-று

வெறியாடுதலேயன்றி இதுவுந்தகாதென் றுங்கருத்தாள், மறியறுக்கவெனப் பிரித்துக்கூறினாளாம். கழல்வைத்தென்றான், எளிதாகச்செய்தலான். பாலனென்னும்யான்மயக்கம் அதிகாரப்புறனடையாற்கொள்க. பரிசினினிற்பித்தவென்புழி ஐந்தாவது ஏழாவதன்பொருட்கண்வந்து. சிறுபான்மை இன்சாரியைபெற்றுநின்றது. ஏழாவதற்கு இன்னென்பதோருருபு புறனடையாற்கொள்ளினுமமையும். மெய்ப்பாடு- இளிவரல். பயன் - தலைமகளதுவேறுபாடுநீக்குதல்.

## இன்னலெய்தல்.

இன்னலெய்தலென்பது - வெறியாடுதற்குத்தாயர்வேலனையழைப்பக்கேட்டதலைமகள், இருவாற்றானும் நமக்குயிர்வாழ்தெறியிலையெனத் தன்னுள்ளேகூறி, இன்னலெய்தாநிற்றல். அதற்குச்செய்யுள்.

அயர்த்தும்வெறி மறியாவிசெகுத்தும்விளர்ப்பயலார் *
பெயர்த்துமொழியாவிடினென்னைபேசுவபேர்த்திருவ *
ருயர்த்தும்பணித்துமுணராதம்பலமுன்னலரித் *
றுயர்த்தம்பிறிதினொழியினென்னாந்துறைவனுக்கே. (௨௮௭)

ஆடியவெறியிற் கூடுவதறியா து
நன்னுதற்கோதை யின்னலெய்திய து.

(இ-ள்) வெறியைவிரும்பியாடியும் மறியினதாவியைக்கெடுத்தும் பின்னுநிறவேறுபாடொழியாதாயின், அயலார்கூறுவனவென்னாம்! வெறியாட்டாகியபிறிதினால், இவ்விளர்ப்பொழியுமாயின், துயரமுற்றும், அத்துறைவனுக்குநாமென்னாவது! இருவாற்றானுமுயிர்வாழ்தலரிது. எ-று. பான்றலைவன் யான்றலைவனென்று தம்முண்மாறுபட்ட பிரமனுமாலுமாகியவிருவர் அந்நிலைமையினின்றும்பெயர்த்து தழற்பிழம்பாகியதன்வடிவையறியலுற்று ஆகாயத்தின்மேற்சென்றுயர்ந்தும் நிலத்தின்கீழ்ப்புக்குத்தாழ்ந்தும், அறியப்படாதவனதம்பலத்தை நினையாதாரைப்போலத் துயரமுற்றுமெனக்கூட்டுக.

மறிபறுத்தற்கு முன்னுரைத்ததுரைக்க. பெயர்த்துமெனவெவிற்றுநின்றது. உணராவென்றது செயப்படுபொருட்கண்வந்தது. தன்னைப்பிரிதல் அன்பமாய் இன்றியமையாதயாம் இத்தன்மையமாகவும், அளிக்கின்றிலனெனவுட்கொண்டு, அவனை நாமுன்னநெருங்க மயங்குமன்பாமாறெல்லாம் இன்றென்னுமென்னுந்து

ருத்தாவ்; என்னுதுமென்றாள். பிறிதுமொழியினென்பது பாட மாயின், வெறியினுற்றணியாதாதலின் இந்நோய்பிறிதென்று பிற ர்மொழியினென்றுரைக்க. மெய்ப்பாடு- அச்சத்தைச்சார்ந்தமரு ட்கை. பயன்-தலைமகள் தன்னெஞ்சொடுசொல்லியாற்றுதல். ()

## வெறிவிலக்குவிக்கநினைதல்.

வெறிவில்க்குவிக்கநினைதலென்பது- இருவாற்றானுநமக்குயிர் வாழுநெறியில்லையாதலாற் றுறைவற்குற்றநோயைப் பிறர்சிதை க்கப்படின்; நாண்டுறந்தும் வெறிவிலக்குவிப்பனெனத் தலைமக ள் தோழியைக்கொண்டு வெறிவிலக்குவிக்க நினையாநிற்றல். அத ற்குச்செய்யுள்:

சென்றார்திருத்தியசெல்லனின்றார்கள்சிதைப்பவொன் *
றன்றுவழகிதன்றேயிறைதில்லைதொழாரினைந்து *
மொன்றுமிவட்குமொழிதல்லில்லேன்மொழியாதுமுய்யேன் *
குன்றூர்துறைவர்க்குறுவேனுரைப்பனிக்கூர்மறையே. (உஅஅ)

அயறருவெறியின் மயற்றுமென
விலக்கலுற்ற குலக்கொடிநினைந்தது.

(இ-ள்.) இறைவன் றதில்லையைத்தொழாதாரைப்போல்வருந்தி யும், நாணினுலென்னேடொன்றுயிருக்கும் என்றோழியாகியவிவ ட்கு மொழியமாட்டுகிலேன்; மொழியர்தொழிந்தாலும் வேறொ ராற்றானுயிர்வாழேன்; ஆயினும், இனிமணற்குன்றுகள்ளார்ந்தது றையையுடையவர்க்குச்சிறந்தயான் இம்மிக்கமறையை யிவட்கு ரைப்பேன்; புணர்ந்துபோயினர் மிகவுமுண்டாக்கிய இந்நோ யைத்தீர்ப்பார் முருகனுகப் பிறராக; இதற்கியாதுமியையிலாதா ர்சிலராயின், இதுபெரிதும்அழகிது. எ-று.

நன்றுவழகிதன்றேயென்பது குறிப்புநிலை. குன்றூர்துறைவர் க்குறுவேனென்றவதனால், நாண்டுறந்தும்மறையுரைத்தற்குக் கார ணங்கூறினாளாம். இந்நோயையேதிலார்சிதைப்பவிடேன், மறை யுரைத்தாயினும் வெறிவிலக்குவேனென்னுங்கருத்தால், நன்றுவ ழகிதன்றேயென்றாள். மயறருமென-வருத்தநமக்குண்டாமென. மெய்ப்பாடு- இளிவரலைச்சார்ந்தநகை. பயன் - வெறிவிலக்குதற் கொருப்படுதல். (உஅஅ)

## அறத்தொடுநிற்றலையுரைத்தல்.

அறத்தொடுநிற்றலையுரைத்தலென்பது-நாண்டுறந்தும் மறையு ரைத்தும் வெறிவிலக்குவிக்கநினையாநின்றதலைமகள், மேலறத்

தொடுநிற்பாளாக, அயலாரேசுக, ஊர்நகுக, அதுவேயுமன்றி, பா
யும்வெகுள்வளாக, அதன்மேல்நீயுமென்னைமுனிவாயாக, நீதெரு
யாகிற் சூளுற்றுத்தருவேன், யான்சொல்லுகின்றவிதனைக் கேட்
பாயாகவெனத் தோழிக்குக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

யாயுந்தெறுகவயலவரேசுகவூர்நகுக *
நீயுமுனிகநிகழ்ந்ததுகூறுவலென்னுடைய *
வாயுமனமும்பிரியாவிறைதில்லைவாழ்த்துநர்போற்
றூயனினக்குக்கடுஞ்சூடருவன்சுடர்க்குழையே. (உஅக)

வெறித்தலைவெரீஇ வெருவருதோழிக்
கறத்தொடுநின்ற வாயிழையுரைத்தது.

(இ-ள்.) சுடர்க்குழையையுடையாய், என துவாயையுமனத்தை
யும் பிரியாதவிறைவனது தில்லையைவாழ்த்துவாரைப்போலத் தூ
யேன், நீதெருயாயின் நினக்குக்கடிய சூளுறலவையுந் தருவேன்,
அயலாரேசுக, ஊர்நகுவதாக, அவற்றின்மேலே யாயும்வெகுளு
வாளாக, அதுவேயுமன்றி, நீயுமென்னைமுனிவாயாக, புகுந்ததனை
யான்கூறுவேன், கேட்பாயாக. எ-று.

தூயேனென்றது-நீக்குகரந்தவுள்ளத்தேனல்லேனென்றவாறு.
தூயனெனக்கென்பது பாடமாயின், எனக்கியான் றூயேனென்
றுரைக்க. அறத்தொடுநின்ற-அறத்தொடுகூடிநின்ற. வெரீஇயுரை
த்ததெனவியையும். பரியாயம், பொருண்மூரணுமாம். மெய்ப்
பாடு-பெருமிதம். பயன்-அறத்தொடுநிற்றல். (உஅக)

## அறத்தொடுநிற்றல்.

அறத்தொடுநிற்றலென்பது-அறத்தொடுநிற்பாளாக முன்றே
ற்றுவாய்செய்து எம்பெருமாற்குப் பழிவருங்கொல்லோவென்
னுமையத்தோடுநின்று, யாமுன்பொருநாள் கடற்கரையிடத்தே
வண்டல்செய்துவிளையாடாநின்றேமாக, அந்நேரத்தொருதோன்
றல், நம்வண்டல்மனைக்கு யாம்விருந்தென்றுவந்துநின்றபொழு
து, நீ பூக்கொய்யச் சிறிதுபுடைபெயர்ந்தாய், அந்நிலைமைக்கட்டி
ரைகாற்றுமிகுதலாற் கரைமேலேறுங்கடல் மேல்வந்துற்றது, உற,
யான்றோழியோ தோழியோவென்று நின்னைவிளித்தேன், அது
கண்டிரங்கி, அவனருளொடுவந்து தன்கையைத்தந்தான், யானும
யக்கத்தாலே யதனைநின்கையென்றுதொட்டேன், அவனும் பிறி
தொன்றுஞ்சிந்தியாது, என்னுயிர்கொண்டுதந்து, என்னைக்கரை
க்கணுய்த்துப்போயினான், அன்று என்னுள்ளினால் நினக்கதனைச்

சொல்மாட்டிற்றிலேன், இன்றிவ்வாறாயினபின் இதுகூறினேன்; இனிநினக்கடுப்பது செய்வாயாகவெனத் தோழிக்குத்தலைமகள் அறத்தொடுநில்லாநிற்றல். அதற்குச்செய்யுள்.

வண்டலுற்றேமெங்கண்வந்தொருதோன்றல்வரிவளையீ *
ருண்டலுற்றேமென்றுநின்றதோர்போழ்துடையான்புலியூர்க் *
கொண்டலுற்றேறுங்கடல்வரவெம்முயிர்கொண்டுதந்து *
கண்டலுற்றேர்நின்றசேரிச்சென்றானோர்கழலவனே (௨௯௰)

செய்தவெறியி னெய்துவதறியா து
நிறத்தொடித்தோழிக் கறத்தொடுநின்றது.

(இ-ள்.) விளையாட்டைப்பொருந்தினேமாகிய வெம்மிடத்து, ஒருதோன்றல், வரிவளையையுடையீர் நும்வண்டல்மனைக்குவிருந்தாய் நானுண்ணக்கருதினேனென்று சொல்லிவந்து நின்றதோர் பொழுதின்கண், உடையானதுபுலியூர்வரைப்பிற் கீழ்காற்றுமிகுதலாற் கரைமேலேவந்தேறுங்கடல் எம்மேல்வர, அதன்கணழுந்தாமல் எம்முயிராக்கையைக்கொண்டு எமக்குத்தந்து, அவ்வொருகழலவன் கண்டலாகியமரமிக்கு அழகுநின்ற அச்சேரியின்கட்சென்றான், இனித் தக்கதுசெய்வாயாக. எ-று.

வண்டலுற்றேமங்கணென்பதுபாடமாயின், அங்கணென்பதனை ஏழாம்வேற்றுமைப்பொருள்படநின்றதோரிடைச்சொல்லாகவுரைக்க. புலியூர்க்கடலெனவியையும். தேரிற்சென்றானென்பதுபாடமாயின், நம்மைக்காண்டல்விரும்பித் தேர்மேலேறிச்சென்றானென்றுரைக்க. தேரினென்பது-கருவிப்பொருட்கண்வந்தவைந்தாமுருபெனினுமமையும் இதற்குக் காண்டலுற்றென்பது குறுகிநின்றது. தோன்றல் கழலவன் என்றதனால், அவனது பெருமையும், எம்முயிர்கொண்டு தந்தென்றதனால் மெய்யுறவுங்கூறினாளாம். மெய்ப்பாடும் பயனும்-அவை. (௨௯௰)

## ஐயந்திரக்கூறல்.

ஐயந்திரக்கூறலென்பது- எம்பெருமாற்குப் பழிவருஞ்சொல்லோவென்றையுற்று அறத்தொடுநின்றதலைமகளது குறிப்பறிந்த தோழி, அவளையந்திர, தங்குடிக்குப்பழிவரினும், அவற்குப்பழி வாராமல் மறைத்துக்கூறுமாறென்னோவெனத் தான் றலைமகளைப்பாதுகாத்தல் தோன்றக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

குடிக்கலர்கூறினுங்கூறுவியன்றில்லைக்கூத்தனதாண் *
முடிக்கலராக்குமொய்ப்பூந்துறைவற்குமுரிபுருவ *

வடிக்கலர்வேற்கண்ணிவந்தனசென்றுநம்யாயறியும் *
படிக்கலராயினவையென்னுமறைக்கும்பரிசுகளே. (௨௬௧)

விலங்குதல்விரும்பு மேதகுதோ ழி
யலங்கற்குழலிக் கறியவுரைத்த து.

(இ-ள்.) முரிந்தபுருவத்தையுடைய வடுவகிரிற்பரந்த வேல்போலுங்கண்ணையுடையாய், கூறலாகாதஅகன்றதில்லையிற்கூத்தனுடையதாள்களைத் தன்முடிக்குப்பூவாக்கும் மொய்த்தபூவையுடைய துறையையுடையவனுக்குவந்தபழிகளை, அவைபோய்ப்பரத்தலான் நம்முடைய யாயுமறியும். அதுவேயுமன்றி, உலகத்திற்கெல்லாமலராம், அதனான் நங்குடிக்கலர்கூறினேமாயினும் இவற்றைநாம்மறைத்துச்சொல்லும்பரிசுகளென்னோ! எ-று.

கூறுத்தாளெனவினையும். வடுவகிரோடு பிறபண்பாலொக்குமாயினும், பெருமையானொவ்வாதென்னுங்கருத்தான், வடிக்கலர்கண்ணென்றார். வடிக்கென்னுநான்காவது - ஐந்தாவதன்பொருட்கண்வந்தது. வடித்தலான்விளங்கும் வேலெனினுமமையும். அறத்தொடுநிற்குமிடத்து எம்பெருமாற்குப் பழிபடக்கூறுமோவென்றையுறுந்தலைமகட்கு, நங்குடிக்கலர்கூறினுந்துறைவற்குப் பழிபடக்கூறேனென்பதுபடக்கூறித் தோழி யறத்தொடுநிற்றலையுடம்படுவித்தவாறு. கூறுவென்பதற்குக் கூத்தனதாள் தனக்குக்கூறுகவென்றும், யாயறியும்படிக்கலராமென்பதற்கு யாயுமறியும்படியாகச் சென்றலராமென்று முரைப்பாருமுளர். மெய்ப்பாடு-பெருமிதம். பயன்-தலைமகளையாற்றுவித்தல். (௨௬௧)

## வெறிவிலக்கல்.

வெறிவிலக்கலென்பது - தலைமகளை ஐயந்தீர்த்து, வெறிக்களத்தேசென்று, வேலனைநோக்கி, புனலிடைவீழ்ந்துகெடப்புக வந்தெடுத்துய்த்த கதிர்த்தோணிற்க, இந்நோய்தீர்த்தற்குப்பிறிதோருபாயத்தைக்கருதுநின்னைப்போல, இவ்வுலகத்தின்கண் அறிவுடையாரில்லையென, மேலறத்தொடுநிற்பாளாகத் தோழி வெறிவிலக்காநிற்றல். அதற்குச்செய்யுள்.

விதியுடையாருண்கவேரிவிலக்கலமம்பலத்துப் *
பதியுடையான்பரங்குன்றினிற்பாய்புனல்யாமொழுகக் *
கதியுடையான்கதிர்த்தோணிற்கவேறுகருதுநின்னின் *
மதியுடையார்தெய்வமேயில்லைகொல்லினிவையகத்தே. (௨௬௨)

அறத்தொடுநின்ற திறத்தினிற்பாங் கி
வெறிவிலக்கிப் பிறி துரைத்த து.

(இ-ள்.) இவ்வெறிபாட்டுவிழவின் வேரியுண்ண விதியுடையவர்கள் வேரியுண்ணவமையும், யாமதனைவிலக்கேம், அதுகிடக்க, அம்பலமாகியவிருப்பிடத்தையுடையானது பரங்குன்றினிடத்துப் பரந்தபுனலோடே யாமொழுக, எடுத்தற்பொருட்டு ஆண்டுவா வையுடையவனுபவனுடைய ஒளியையுடையதோள்கணிற்க, இந்நோய்தீர்த்தற்கு வேறோருபாயத்தைக்கருதுநின்னைப்போலறிவுடையார், தெய்வமே, இவ்வுலகத்து இப்போழ்தில்லைபோலும். எ-று.

இவ்வாறுகூறவே, நீ கூறியதென்னென்றுகேட்ப அறத்தொடுநிற்பாளாவதுபயன். அம்பலத்தென அத்துச்சாரியை அல்வழிக்கண்வந்தது. ஒரிடத்தானெனுதக்கப்படாமையிற் பதியுடையவனென்றுசொல்லப்படாதவன் அம்பலத்தின்கண்வந்து பதியுடையனாயினானென்பதுபடவுரைப்பினுமமையும். பரங்குன்றினென்பதற்குப் பாலன்புகுந்திப் பரிசினினிற்பித்தவென்றதற்குரைத்ததுரைக்க. ஒழுகவென்னும்வினையெச்சம் கதியையுடையானென்னுமாக்கத்தையுட்கொண்டவினைக்குறிப்புப்பெயரோடுமுடியும். கதி-ஆண்டுச்சென்றசெலவு. கதிர்த்தோணிற்கவென்பதற்கு எடுத்தற்பொருட்டு அவன்றோள்வந்து நிற்கவென்று பொருளுரைத்து, அவ்வெச்சத்திற்கு முடிபாக்கினுமமையும். மதியுடையாரில்லைகொல்லென்பது-குறிப்புநிலை. அறத்தொடுநின்ற திறத்தினில்-அறத்தொடுநின்றதன்மைத்தாக. பிறிது-புனலிடை யவன்வந்துதவி. மெய்ப்பாடு-பெருமிதத்தைச்சார்ந்தநகை. பயன்-குறிப்பினால்வெறிவிலக்குதல்.

(உகூஉ)

## செவிலிக்குத்தோழியறத்தொடுநிற்றல்.

செவிலிக்குத்தோழியறத்தொடுநிற்றலென்பது-வெறிவிலக்கிநிற்ப, நீ வெறிவிலக்குதற்குக்காரணமென்னோவென்றுகேட்டசெவிலிக்கு, நீ போய்ப் புனங்காக்கச்சொல்ல, யாங்கள்போய்த்தினைக்கிளிகடியாநின்றேம், அவ்விடத்தொருயானைவந்துநின்மகளையே தஞ்செய்யப்புக்கது, அதுகண்டு அருளுடையானொருவன் ஓடிவந்தணைத்துப் பிறிதொன்றுஞ்சிந்தியாமல் யானையைக்கடிந்து அவளதுயிர்கொடுத்துப் போயினான், அறியாப்பருவத்து நிகழ்ந்ததனை இன்றறியும்பருவமாதலான், "உற்றார்க்குரியர் பொற்றொடி மகளிர்" என்பதனையுட்கொண்டு, இவ்வாறுண்மெலியாநின்றாள்,

இனிபடுப்பது செய்வாயாகவெனத் தோழி அறத்தொடுநில்லாநிற்றல். அதற்குச்செய்யுள்.

மனக்களியாயின்றியான்மகிழ்தூங்கத்தன்வார்கழல்க *
ளெனக்களியாநிற்குமம்பலத்தோனிருந்தண்கயிலைச் *
சினக்களியானைகடிந்தாரொருவர்செவ்வாய்ப்பசிய *
புனக்கிளியாங்கடியும்வரைச்சாரற்பொருப்பிடத்தே. (உகூக)

சிறப்புடைச்செவிலி க்
கறத்தொடு நின்ற து.

(இ-ள்.) உள்ளக்களிப்புண்டாய் இன்பியான் மகிழ்தூங்கும்வண்ணம் எனக்குத்தன்னுடைய நீண்டகழலையுடைய திருவடிகளையளியாநிற்கும் அம்பலத்தானது பெரிதாகிய குளிர்ந்தகயிலைக்கண் எம்புனத்தின்கண்வருஞ் செவ்வாயையுடைய பசியகிளிகளையாங்கடியும் வரையடியினுண்டாகிய பொருப்பிடத்தின்கண்வந்து, ஒருவர் எம்மேல்வருஞ் சினத்தையுடைய களியானையைமாற்றினூர், இனியபடிப்பதுசெய்வாயாக. எ-று.

கயிலையென்றது-கயிலையையணைந்தவிடத்தை, கடியும்பொருப்பெனவியையும். வரை-உயர்ந்தவரை. பொருப்பு-பக்கமலை. கிளிகடியும்பருவமென்றதனுற் கற்பிலேனுமாறுகொள்ளாமை மூலாயினகூறினுளாம். மெய்ப்பாடு-அது. பயன்-வெளிப்படையாலறத்தொடுநிற்றல். (உகூரு)

## நற்றாய்க்குச்செவிலியறத்தொடு நிற்றல்.

நற்றாய்க்குச்செவிலியறத்தொடுநிற்றலென்பது- தோழியறத்தொடுநிற்பக்கேட்டசெவிலி, இளையளாகிய இல்வாழ்க்கைச்செல்வத்தையுடையவிவளை என்சொல்லிப்புகழுவோம், முன்னெழுமிரண்டெயிறு முளையாதவிளமைப்பருவத்தே அறிவுமுதிர்ந்தாளெனத் தலைமகளது கற்புமிகுதிதோன்ற நற்றாய்க்கறத்தொடுநில்லாநிற்றல். அதற்குச்செய்யுள்.

இளையாளிவளையென்சொல்லிப்பரவுதுமீரெயிறு *
முளையாவளவின்முதுக்குறைந்தாண்முடிசாய்த்திமையோர் *
வளையாவழுத்தாவருதிருச்சிற்றம்பலத்துமன்னன் *
திளையாவருமருவிக்கயிலைப்பயில்செல்வியையே. (உகூச)

கற்பினின்வழாமை நிற்பித்தெடுத்தோ ள்
குலக்கொடிதாயர்க்கறத்தொடுநின்ற து.

(இ-ள்.) இமையோர் தம்முடியைச்சாய்த்துவணங்கியும் வாழ்த்தியும் வருந்திருச்சிற்றம்பலத்தின்கண் உளனாகியமன்னனது திளைத்துவருமருவினையுடைய கயிலைக்கட்பயிலுந்திருவாட்டியை, இளையளாகியவிவளை, என்சொல்லிப்புகழ்வோம்! முன்னெழுமிரண்டெயிறும் முளையாதவிளமைக்கண் அறிவுமுதிர்ந்தாள். எ-று.

திளைத்தல்-கண்டிடைவிடாது அவ்விடத்தேபயிறல். கற்பினின்வழாமைநிற்பித்தெடுத்தோள்-கற்பினின்வழுவாமலறிவுகொளுத்திவளர்த்தவள். மெய்ப்பாடு உவகை. பயன்- நற்றாய்க்கறத்தொடுநிற்றல். (௨௯௩)

## தேர்வரவுகூறல்.

தேர்வரவுகூறலென்பது- நற்றாய்க்குச்செவிலியறத்தொடுநில்லாநிற்ப, அந்நிலைமைக்கட்டலைமகனது தேரொலிகேட்டதோழி, உவகையோடுசென்று, தலைமகளுக்கு அதன்வரவெடுத்துக்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

கள்ளினமார்த்துண்ணும்வண்கொன்றையோன்றில்லைக்கார்க்கடல்வாய்ப் *
புள்ளினமார்ப்பப்பொருதிரையார்ப்பப்புலவர்கடம *
வள்ளினமார்ப்பமதுகரமார்ப்பவலம்புரியின் *
வெள்ளினமார்ப்பவரும்பெருந்தேரின்றுமெல்லியலே. (௨௯௪)

மணிநெடுந்தேரோ னணிதினின்வருமென
யாழியன்மொழிக்குத் தோழிசொல்லியது.

(இ-ள்.) மெல்லியால், கள்ளை வண்டினங்களார்த்துண்ணும் வளவியகொன்றைப்பூவையுடையவனது தில்லையயனேர்ந்தகரியகடலிடத்து ஆண்டுப்படியும் புள்ளினங்களார்ப்பக் கரையைப்பொருந்திரைகளார்ப்ப, அவ்வாரவாரத்தோடு மங்கலங்கூறும்புலவர்கடமது வள்ளியவினமார்ப்ப, நறவினையால் வண்டுகளார்ப்ப, வலம்புரியினது வெள்ளியவினமார்ப்ப, இன்று நங்காதலர்பெருந்தேர்வாராநின்றது. எ-று.

சார்ந்தவொழுக்கத்து மணியொசலியபலித்துவந்ததேர், வரைந்தெய்த இவ்வரவத்தோடும்வருமென மகிழ்ந்துகூறியவாறு. கள்ளென்பது-வண்டினுளொருசாதியென்பாருமுளர். புள்ளினத்தையும் பொருதிரையையும் அவன்வரவிற்கு உவந்தார்ப்பனபோலக்கூறினாள். இதனை மிகைமொழிப்பாற்படுத்திக்கொள்க. முன்னர்த்தலைமகன்பிரிந்தகாலத்துத் தலைமகளாற்றாமையைத் தாயாற்றுவிக்கமாட்டாது பொறுத்துக்கண்டிருந்த புள்ளினமுங் கடலும் அ

வனது தேர்வரவு கண்டு, இனிப்பிரிவும்பிரிவாற்றாமையுமில்லையென்று மகிழ்வற்றாற்கதனவென்றறிக. அணிதினின்வரும்-அணித்தாகவரும். மெய்ப்பாடு-பெருமிதம் பயன்- தலைமகளையாற்றுவித்தல், வரைவுமலிந்தமையுணர்த்துதலுமாம். (௨௬௫)

## மணமுரசுகேட்டுமகிழ்ந்துரைத்தல்.

மணமுரசுகேட்டுமகிழ்ந்துரைத்தலென்பது - தோழி தலைமகளுக்குத்தேர்வரவுகூறுநின்ற அந்நிலைமைக்கண் மணமுரசுகேட்டு மனையிலுள்ளார், இஃதிவளை நோக்கிப்பொலியாநின்றது மணமுரசெனவுட்கொண்டு, யாம் பூரணபொற்குடந்தோரணமுதலாயினவற்றான் மனையையலங்கரிப்போமென மகிழ்வொடுகூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

பூரணபொற்குடம்வைக்கமணிமுத்தம்பொன்பொதிந்த *
தோரணநீடுகதூரியமார்க்கதொன்மாலயற்கும் *
காரணன்காரணிகண்ணுதலோன்கடற்றில்லையன்ன *
வாரணவும்முலைமன்றலென்றேங்குமணமுரசே. (௨௬௬)

திலங்காவலர் நீண்மணத் தி
னலங்கண்டவர் நயந்துரைத்த து.

(இ-ள்) புவழயராகிய அரியயனுக்குங்காரணனாயுள்ளான், அழகுண்டாகியகண்ணையுடைய நுதலையுடையான், அவனது கடலையுடைத்ததில்லையையொக்கும் வாராற்கட்டப்படு மளவைச்சென்றணவும் முலையையுடையாளது மணமென்று மணமுரசேங்காநின்றது, அதனால், வாயில்கடோறும் நிரானிறைக்கப்பட்ட பொற்குடத்தை வைக்க, மணியுமுத்தும் பொன்னின் கணழுத்தியதோரணம் எங்குமோங்குவதாக, தூரியங்கணின்றார்ப்பனவாக. எ-று.

வாரணவுமுலையென்பதற்கு வாராற்பொருந்துமுலையெனினுமமையும். மெய்ப்பாடு-உவகை. பயன்-நகரியலங்கரித்தல். (௨௬௬)

## ஐயுற்றுக்கலங்கல்.

ஐயுற்றுக்கலங்கலென்பது- மணமுரசுகேட்டவள் மகிழ்வொடுநின்று மனையையலங்கரியாநிற்ப, மிகவுங்களிப்பையுடைத்தாய நமதுசிறந்தநகரின்கண் முழங்காநின்ற இப்பெரியமுரசம், யாவர்க்கோ அறிகின்றிலேனெனத் தலைமகள் கலக்கமுற்றுக்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

அடற்களியாவர்க்குமன்பர்க்களிப்பவன்றன்பவின்பம் *
படக்களியாவண்டறைபொழிற்றில்லைப்பாமல்வெற்பித் *

கடக்களியானைகடிந்தவர்க்கோவன்றிநின்றவர்க்கோ *
விடக்களியாநம்விழுநகரார்க்கும்வியன்முரசே. (உகூஎ)

நல்லவர்முரசமற் றல்லவர்முரசென   தீ.
தெரிவரிதெனவரிவைகலங்கிய   து.

(இ-ள்.) மிகவுங்களிப்புண்டாய நமது சிறந்தவில்லின்கண் முழங்காநின்ற இப்பெரியமுரசம், வெற்பின்கண் மதத்தையுடைய களியானையை நம்மேல்வாராமல் மாற்றினவர்க்கோ! அன்றி யாதுமிவையில்லாதவர்க்கோ? அறிகின்றிலேன். எ-று பிறவியான்வருந்துன்பமுமின்பமுங்கெட இயல்பாகிய பேரின்பத்தை யாவராயினுமன்பராயினார்க்கு வரையாதுகொடுப்போன், களித்துவண்டுகளொலிக்கும் பொழிலையுடையதில்லைக்கணுள்ளாகிய பரமன், அவனது வெற்பிலெனக்கூட்டுக.

அடற்களி- அடுதல்செய்யாதபேரின்பம். அடக்களியென்பது பாடமாயின், பேரின்பம் யாமென்னுமுணர்வினைக் கெடுப்பவென்றுரைக்க. மெய்ப்பாடு- அச்சத்தைச்சார்ந்தமருட்கை. பயன்-ஐயந்தீர்தல். (உகூஎ)

## நிதிவரவுகூறுநிற்றல்.

நிதிவரவுகூறுநிற்றலென்பது- முரசொலிகேட்டு ஐயுற்றுக்கலங்காநின்றதலைமகளுக்கு, நமர்வேண்டினபடியே அருங்கலங்கொடுத்து நின்னைவரைந்துகொள்வாராக, யானைகடிந்தார், நமதுகடைமுன்கொணர்ந்திறுத்தார் குறைவில்லாதநிதி, இதனைநீகாண்பாயாகவெனத் தோழி மகிழ்ந்தருமனத்தொடுநின்று நிதிவரவுகூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

என்கடைக்கண்ணினும்யான்பிறவேத்தாவகையிரங்கித் *
தன்கடைக்கண்வைத்ததண்டில்லைச்சங்கரன்றாழ்கயிலைத் *
தொன்கடைக்கண்டரும்யானைகடிந்தார்கொணர்ந்திறுத்தார் *
முன்கடைக்கண்ணிதுகாண்வந்துதோன்றுமுழுநிதியே. (உகூஅ)

மகிழ்ந்தருமனத்தொடு வண்புகழ்த்தோ   ழி
நிகழ்நிதிமடந்தைக்குத் தெரியவுரைத்த   து.

(இ-ள்.) கடையாகியவென்னிடத்தும், யான்பிறதெய்வங்களையேத்தாவண்ணமிரங்கித் தனதுகடைக்கண்ணைவைத்த குளிர்ந்த தில்லைக்கணுள்ளாகிய சங்கரன் மேவுங்கயிலையிடத்துத் தமக்கொருபயன்கருதாது நமக்கிறுதியைப்பயக்கும் யானையையன்றவ

டிந்தவர், கொணர்ந்துவிட்டார், விட, நங்கடைமுன்வந்து தோன்றும் குறைவில்லாதநிதி, இதனைக்காண்பாயாக. எ-று.

என்கடைக்கண்ணினுமென்பதற்கு மொழிமாற்றாது எனதுகடையாகியநிலைமைக்கண்ணுமென்றுரைப்பினுமமையும். கண்ணகன்ஞாலமென்புழிப்போலக் கண்ணென்பது ஈண்டுப்பெயராகலின் ஏழனுருபுவிரித்துரைக்க. கடைக்கண்ணினுமென்னும்வேற்றுமைச்சொல்லும், ஏத்தாவகையென்னும்வினையெச்சமுங் கடைக்கண்வைத்தவென்னும் வினைகொண்டன. கடைக்கணென்பதனை முடிவாக்கி, என்முடிவுகாலத்தும் பிறவேத்தாவகையென்றுரைப்பாருமுளர். கொன்கடைக்கண்டரும்யானையென்பதற்கு, அச்சத்தைக்கடைக்கண்டரும்யானையென்றுரைப்பாருமுளர். வண்புகழ்-அறத்தொடுநின்று கற்புக்காத்தலான்வந்தபுகழ். மெய்ப்பாடு-உவகை. பயன்-ஐயந்தீர்த்தல். (௨௧௮)

வரைபொருட்பிரிதல் முற்றிற்று.

## மணஞ்சிறப்புரைத்தல்.

மணஞ்சிறப்புரைத்தலென்பது- வரைந்தபின்னர் மணஞ்சிறப்புக்கூறுநிற்றல்.

அதுவருமாறு. சூத்திரம். மணமுரசுகூறன் மகிழ்ந்துரைத்தலொடு, வழிபாடுகூறல் வாழ்க்கைநலங்கூறல், காதல்கட்டுரைத்தல் கற்பறிவித்தல், கற்புப்பயப்புரைத்தல் காதன்மருவுரைத்தல், கலவியுரைத்தல் கருதியவொன்பது, நலமிகுமணமிவை நாடுங்காலே.

(இ-ள்.) மணமுரசுகூறல்-மகிழ்ந்துரைத்தல்- வழிபாடுகூறல்- வாழ்க்கைநலங்கூறல்-காதல்கட்டுரைத்தல்-கற்பறிவித்தல்- கற்புப்பயப்புரைத்தல்- மருவுதலுரைத்தல்- கலவியின்பங்கூறல் எனவிவையொன்பதும் மணஞ்சிறப்புரைத்தலாம். எ-று. அவற்றுள்,

### மணமுரசுகூறல்.

மணமுரசுகூறலென்பது - வரைபொருட்பிரிந்துவந்தபின்னர் அருங்கலம்விடுத்தற்கு முன்றிற்கணின்று தலைமகனதுமுரசுமுழங்காநிற்பக்கண்டு மகிழ்வுறுநின்றதோழி, நாந்துயர்தீர நம்மில்லின்கட்புகுந்துநின்று யானைகடிந்தார்முரசு முழங்காநின்றது, இனியென்னகுறையுடையோமென வரைவுதோன்றநின்று, தலைமகளுக்கு மணமுரசுகூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

பிரசந்திகழும்வரைபுரையானையின்மிடழித்தார் *
முரசந்திகழுமுருகியநீங்குமெவர்க்குமுன்னா *
மரசம்பலத்துநின்றாடும்பிரானருள்பெற்றவரிற் *
புரைசந்தமேகலையாய்துயர்தீரப்புகுந்துநின்றே. (௨௯௯)

வரைவுதோன்ற மகிழ்வுற்றதோ ழி
இறைவனுக்கு நின்றுரைத்த து.

(இ-ள்.) நிறத்தையுடையவுயர்ந்தமேகலையையுடையாய், அரியயன்முதலாகிய யாவர்க்கும் முன்னாயிருக்குமரசு, இவ்வாறுபெரியனாயினும் எளியனாய் அம்பலத்தின்கண் எல்லாருங்காணநின்றாடுமுதல்வன், அவனதருளுடையவரைப்போல நாந்துயர்தீர, நம்மில்லின்கட்புகுந்துநின்று, பெருந்தேன்றிகழுமலைக்கண் வரைபோலும் யானையினது வலியை நங்காரணமாக வழித்தவரதுமுரசு முழங்கிவிளங்காநின்றது, அதுவேயுமன்றி, வெறிகாரணமாகவொலிக்கும் முருகியமும் நீங்காநின்றது, இனியென்னகுறை யுடையோம். எ-று.

புகுந்துநின்றுதிகழுமெனக்கூட்டுக. வரையுயர்யானையென்பதூஉம்பாடம். முருகுங்கமழுமென்றுபாடமோதி, கலியாணத்திற்குமுப்பாம் நறுவிரை நாறுநின்றனவென்றுரைப்பாருமுளர். மெய்ப்பாடு-அது. பயன்-தலைமகளைமகிழ்வித்தல். (௨௯௯)

## மகிழ்ந்துரைத்தல்.

மகிழ்ந்துரைத்தலென்பது- மணமுரசொலிகேட்டதோழி, சிலம்பன்றந்த பெறுதற்கரிய தழைகளை வாடாமல்வைத்து, அத்தழையே பற்றுக்கோடாக ஆற்றியிருந்தாளெனத் தலைமகளைத் தன்னுள்ளே மகிழ்ந்துகூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

இருந்துதியென்வயிற்கொண்டவன்யானெப்பொழுதுமுன்னு *
மருந்துதிசைமுகன்மாற்கரியோன்றில்லைவாழ்த்தினர்போ *
விருந்துதிவண்டனவாவெரிமுன்வலஞ்செய்திடப்பா *
லருந்ததிகாணுமளவுஞ்சிலம்பனருந்தழையே. (௩௱)

மன்னியகடியிற் பொன்னறுங்கோதை யை
நன்னுதற்றோழி தன்னின்மகிழ்ந்த து.

(இ-ள்.) சிலம்பன்றந்தபெறுதற்கரியதழைகள், இப்பொழுதழன்றீயைவலங்கொண்டு பின் வசிட்டனிடப்பக்கத்துத்தோன்றும் அருந்ததியைக்காணுமளவுந் தில்லையை வாழ்த்தினரைப்போல வாடாதிருந்து விளங்கின, எ-று. அஃதுயர்துதிப்ப அவர்வயிற்றுன்

கொள்ளும்பெருந்துறையை என்வயினுண்டாக்கிக்கொண்டவன், யானெப்பொழுதுமுன்னும்வண்ணஞ்சுவையுடைத்தாயதோர்மருந்து, இவ்வாறெனக்கெளியனாயினுந் திசைமுகற்கும் மாற்குமரியான், அவனது தில்லையெனக்கூட்டுக.

என்றது - தழைகளைவாடாமல்வைத்து, அத்தழையேபற்றுக்கோடாக ஆற்றியிருந்தாளெனத் தலைமகளைமகிழ்ந்து கூறியவாறு. இவண்டனவென்பதற்கு வாடாதிருந்து இவளைத்தீண்டியின்புறுத்தினவென்றுரைப்பினுமமையும். தழைவாடாதிருந்தனவென்றது-முன்னர்த்தான் அவன்றந்ததழையையேற்ற முகூர்த்தத்தைக் கொண்டாடியவாறு. மெய்ப்பாடு-உவகை. பயன்-மகிழ்தல். வேயினமென்றோளென்னுமதுதொட்டு இதுகாறும்வர இப்பாட்டுப்பத்தொன்பதும் அறத்தொடுநிலையினையும், அதன்பின்னர் வரைதலையுறுதலினவென்பது. (௯௮)

அகத்திணையின்மிகத்திகழுமின்பக்கலவியின்பக்களவுமுற்றிற்று. எண்பத்தொராம்பாட்டுமுதல் இப்பாட்டீறாகத் தோழியாலாயகூட்டம்.

## வழிபாடுகூறல்.

வழிபாடுகூறலென்பது - மணஞ்செய்தபின்னர் மணமனைகாணவந்தசெவிலிக்கு, காவலர் உடம்புமுயிரும்போல ஒருவரையொருவர் இன்றியமையாமையால் இவள்கருத்தைக்கடவார், கமலங்கலந்ததேனுஞ்சந்தனமரமும்போலவிளைந்து இவள்கற்புவழிநிற்றலையுடையராய் இவள்வழியே நின்றொழுகாநின்றொனத் தோழி தலைமகன்றலைமகள் வழியொழுகாநின்றமை கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

ஓரியலாவியும்யாக்கையுமென்னச்சிறந்தமையாத் *
காரியல்வாட்கண்ணியெண்ணகலார்கமலங்கலந்த *
வேரியுஞ்சந்தும்வியறந்தெனக்கற்பினிற்பரன்னே *
காரியல்கண்டர்வண்டில்லைவணங்குமெங்காவலரே. (௯௯)

மணமனைகாண வந்தசெவிலிக்குத்
துணைமலர்க்குழலி தோழிசொல்லியது.

(இ-ள்.) அன்னாய், கார்போலுங்கண்டத்தையுடையவரது வளவியதில்லையைவணங்குமெம்முடைய காவலர், ஓர்தன்மையியலுமுயிருமுடம்பும்போல ஒருவரையொருவர் இன்றியமையாமையால், கரியவியல்பையுடைய வாள்போலுங் கண்ணையுடையாளது கருத்

லைக்கடவார், தாமரைப்பூவைச்சேர்ந்த தேனுஞ்சந்தனமரமும் இடத்துநிகழ்பொருளு'மிடமுமாய் இயைந்து தம்பெருமையைப்புலப்படுத்தினாற்போல இயைந்து,இவளது வழிபாட்டின்கண்ணே நிற்பர் எ-று.

எண்ணைகலாவொன்றதனாற் காதலியாதலும், கற்பினிற்பவொன்றதனால் வாழ்க்கைத்துணையாதலுங்கூறப்பட்டன. ஆவியும்வேரியும் தலைமகட்குவமையாகவும், யாக்கையுஞ்சந்தும் தலைமகற்குவமையாகவுமுரைக்க. பிரித்துவமையாக்காது, இவரதுகூட்டத்திற்கு அவற்றதுகூட்டமுவமையாகவுரைப்பினுமமையும். காரியல்கண்டர்வண்டில்லைவணங்குமென்றதனான், இவரதில்வாழ்க்கை இன்றுபோல என்றும் நிகழுமென்பதுகூறினாளாம். இன்னேயென்பது பாடமாயின்,இப்பொழுதேயென்றுரைக்க. மெய்ப்பாடு- உவகை. பயன்-மகிழ்வித்தல். (ருாக)

## வாழ்க்கைநலங்கூறல்.

வாழ்க்கைநலங்கூறலென்பது- மணமனைகண்டசெவிலி, மகிழ்வோடுசென்று,நின்மகளுடையவில்வாழ்க்கைநலத்திற்கு உவமைகூறில், நின்னுடையவில்வாழ்க்கைநலமல்லது வேறுவமையில்லையென நற்றாய்க்குத் தலைமகளது வாழ்க்கைநலங்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

தொண்டினமேவுஞ்சுடர்க்கழலோன்றில்லைத்தொன்னகரிற் *
கண்டினமேவுமினியவணின்கொழுநன்செழுமென் *
றண்டினமேவுதிண்டோளவன்யானவடற்பணிவோள் *
வண்டினமேவுங்குழலாளயன்மன்னுமிவ்வயலே. (ருாஉ)

மணமனைச்சென்று மகிழ்தருசெவி லி
யணிமனைக்கிழத்திக் கதன்சிறப்புரைத்த து.

(இ-ள்.) தொண்டாதினத்தைப்பொருந்துஞ்சுடர்க்கழலையுடையவனது தில்லையாகிய பழையநகரிடத்தியான்கண்ட அவளதில்லம் மேவப்படு நமதில்லத்தோடொக்கும், அவன் நின்னோடொக்கும், கண்டாகியவினத்தையொக்கும்வளவியவாய் மெல்லியவாகிய திண்ணியதோள்களையுடையான் நின்கொழுநனோடொக்கும், அவடன்னைப்பணிந்து குற்றேவல்செய்வாள் என்னோடொக்கும், வண்டினம்பொருந்துங்குழலையுடையாளதயல் இவ்வயலோடொக்கும், வேறுசொல்லாவதில்லை. எ-று.

கண்டவென்பது-கடைக்குறைந்துநின்றது. பெண்டிர்க்கு வ

திரிசாதனைநோக்கித் தோளிற்குமென்மைகூறினர். தண்டின்மென்புழி இனமென்றது-சாதியை. மன்னும் அசைநிலை. பெரும்பாண்மையுமென்பது படநின்றதெனினுமமையும். கண்டென்பதனைத் தன்மைவினையென்று, அவளில்வாழ்க்கையேர்கண்டேனென றும் பொதுவகையாற்கூறிப் பின்சிறப்புவகையாற் கூறிற்றாகவுரைப்பாருமுளர் மெய்ப்பாடும் பயனும்-அவை. (௩௱௨)

## காதல்கட்டுரைத்தல.

காதல்கட்டுரைத்தலென்பது- அவளில்வாழ்க்கைநலங்கிடக்க அவன் அவண்மேல்வைத்தகாதலான் இவையேயன்றிப் பொறையாமென்றுகருதி நுதலின்கண் இன்றியமையாத காப்பாகியபொட்டையுமணியான், இஃதவன்காதலெனத் தலைமகனாகாதன்மிகுதி கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

பொட்டணியானுதல்போயிறும்பொய்போலிடையெனப்பூ *
ணிட்டணியான்றவிசின்மலரன்றிமிதிப்பக்கொடான் *
மட்டணிவார்குழல்வையான்மலர்வண்டுறுதலஞ்சிக் *
கட்டணிவார்சடையோன்றில்லைபோலிதன்காதலனே. (௩௱௩)

சோதி வேலவன்
காதல்கட்டுரைத்தது.

(இ-ள்.) மகுடமாகக் கட்டப்பட்ட அழகிய நீண்டசடையையுடையவனது தில்லையையொப்பாடன்னுடைய காதலன், பொய்போலுமிடைபோயிறுமென்றுகருதிப்பூணைப்பூட்டியணியான், மெல்லடிநோதலஞ்சித் தவிசின் மிதிப்புழியும் மலரின்றி மிதிப்பவிடான், வண்டுற்றுமொய்த்தலஞ்சித் தேனையுடையவழகியவார்குழலிடத்துமலர்களைவையான், இவைசொல்லுகின்றதென்! பொறையாமென்றுநுதலின்கட்பொட்டையுமிடான். எ-று.

கட்டணிவார்சடையென்பதற்கு மிக்க அழகையுடைய சடையெனினுமமையும். தவிசின் மிசையென்று பாடமோதுவாருமுளர். (௩௱௩)

## கற்பறிவித்தல்.

கற்பறிவித்தலென்பது-தலைமகனாகாதன்மிகுதிகூறினசெவிலி, அதுகிடக்க, அவளவனையொழிய வேறொருதெய்வத்தைத் தெய்வமாகக்கருதாளாதலான், அவன்றன்னைவணங்காத பகைவனைச் சென்றுகிட்டித் திறைகொள்ளச்சென்றாலுந் திறைகொண்டுவருந்து அவனதில்லத்தல்லது ஆண்டுத்தங்கியறியான், இஃதவரதியல்

(இ-ள்.) நாயினிடத்துள்ள நன்மையுமில்லாத வென்னை நல்ல தொண்டாகக்கொண்ட தீயிடத்து நிறம்போலு நிறத்தையுடையவனது சிற்றம்பலத்தையொக்குஞ் சிலவாகியமொழியையுடையாளிடத்துப் பேயினிடத்துஞ் செய்தலரிதாம்பிரிவை யெளிதாக்குவித்துச் சேய்த்தாகிய இவ்விடத்துப்போந்த நெஞ்சமே, உனதின்னைவு அஞ்சத்தக்கது. எ-று.

நற்றெருண்டென்புழி நன்மை சாதியடை. சின்மொழியையெ ன்னுமிரண்டாவது ஏழாவதன்பொருட்கண்வந்தது. (௩௪௩

## நெஞ்சொடுமறுத்தல்.

நெஞ்சொடுமறுத்தலென்பது- நெஞ்சொடுபுலந்துகூறிப்பின்னும் பொருண்மேற்செல்லாநின்றவுள்ளத்தோடு தலைமகளைநினைந்து, இத்தன்மைத்தாகிய பொன்னைவிட்டு வேறுபொன்றேடியோ, எம்மைவாழச்செய்வது, இதற்கியாமுடம்படேம் நாமேநடக்கவெனச் செலவுடம்படாது பொருள்வலித்தநெஞ்சொடுமறுத்துக்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

தீமேவியநிருத்தன்றிருச்சிற்றம்பலமனைய *
பூமேவியபொன்னைவிட்டுப்பொன்றேடியிப்பொங்குவெங்கா *
னாமேநடக்கவொழிந்தனம்யாநெஞ்சம்வஞ்சியன்ன *
வாமேகலையைவிட்டோபொருடேர்ந்தெம்மைவாழ்விப்பதே.()

நீணெறிசென்ற நாறிணர்த்தாரோ ன்
சேணெறியஞ்சி மீணெறிசென்ற து.

(இ-ள்.) நெஞ்சமே, தீயைப்பொருந்திய நிருத்தத்தையுடையவனது திருச்சிற்றம்பலத்தையொக்கும் பூவின்கண்மேவியபொன்னைவிட்டு வேறுபொன்னைத்தேடாநின்று இவ்வழல்பொங்கும் வெங்கானின் நாமே நடப்பீராயின், யாமொழிந்தேம், பொருடேடியெம்மைவாழச்செய்வது வஞ்சியையொக்கு மழகியமேகலையையுடையாளை விட்டோ, யாமிதற்குடம்படேம். எ-று.

இதுவும்பெருந்திணைப்பாற்படும். மீளநினைந்ததுணையல்லது மீண்டிலனென்பார் மீணெறியையுள்ளத்தாற்சென்றதென்றுரைப்ப. இப்பாட்டு நான்கிற்கும் மெய்ப்பாடு - அச்சம். பயன்-செலவழுங்குவித்தல். (௩௪௪)

## நாளெண்ணிவருந்தல்.

நாளெண்ணிவருந்தலென்பது - தலைமகனதுவரவுநீட்டநினைந்துவருந்தாநின்ற தலைமகளதுவருத்தங்கண்டதோழி, இவளோ

யிப்பொருந்தச்சென்றவர்சென்றநாளையெண்ணுந்தன்மையாற் பலகாலிடுதலின் நிலனுங்குழிந்து விரலுந்தேய்ந்ததென, அவன்சென்றநாளெண்ணி வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்.

தெண்ணீரணிசிவன்சிற்றம்பலஞ்சிந்தியாதவரிற் *
பண்ணீர்மொழியிவளைப்பையுளெய்தப்பனித்தடங்க *
ணுண்ணீருகவொளிவாடநீடுசென்றார்சென்றநா *
ளெண்ணீர்மையினிலனுங்குழியும்விரலிட்டறவே. (௩௪௫)

சென்றவர்திறத்து நின்றுநனிவாடு ஞ்
சூழிருங்கூந்தற்குத்தோழிநனிவாடியது.

(இ-ள்.) தெண்ணீரைச்சூடியசிவனது சிற்றம்பலத்தைச்சிந்தியாதவரைப்போல வருந்தப் பண்ணீர்மையையுடைய மொழியையுடையவிவளை நோய்பொருந்தக் குளிர்ச்சியையுடையபெரியகண்ணகத்து நீர்வார, மேனியொளிவாட, காலநீடப் பிரிந்தவர் பிரிந்தநாளை எண்ணுந்தன்மையாற் பலகாலிடுதலின் விரல்தேய நிலனுங்குழியும், இனியெங்ஙனமாற்றும்! எ-று.

ஒளிவாடினளென்பது பாடமாயின், விரலிட்டென்பதனைத் தோழிமேலேற்றுக. மெய்ப்பாடு- அழுகை. பயன் - தலைமகளையாற்றுவித்தல். (௩௪௫)

## ஏறுவரவுகண்டிரங்கியுரைத்தல்.

ஏறுவரவுகண்டிரங்கியுரைத்தலென்பது- பொருண்முற்றிமீளவுருநின்றதலைமகன், மாலைக்காலத்து நாகொடுவாராநின்ற ஏறுவரவுகண்டு, இசசிறந்தசெக்கர்மாலை அவள் பொறுக்குமளவன்றென இரங்கிக்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

சிற்றம்பலமின்மைகாட்டித்தன்சீரல்கழறந்ததொல்லோன் *
சிற்றம்பலமனையாள்பரமன்றுதிண்கோட்டின்வண்ணப் *
புற்றங்குதார்ந்துநன்னாகொடும்பொன்னேர்மணிபுலம்பக் *
கொற்றமருவுகொல்லேறுசெல்லாநின்றகூர்ஞ்செக்கரே. (௩௪௭)

நீடியபொன்னி னெஞ்சநெகிழ்ந் து
வாடியவன் வரவுற்ற து.

(இ-ள்.) திண்ணியகோட்டான் நிறத்தையுடையபுற்றையிடந்து இரும்பார்ந்தமணியொலிப்ப வெற்றியைப்பொருந்தின கொல்லவல்ல ஆனேறு நல்லநாகோடும் ஊர்வயிற்செல்லாநின்றன, சிறக்குஞ்செக்கர்வானையுடையமாலை, சுற்றத்தாற் பயனின்மையயறிவித்துப் பிறவிமருந்தாதற்குப் பழையவாய்வருகின்ற தன்கழ

லிகளை யெனக்குத்தந்த பழையோனது சிற்றம்பலத்தையொப்பா ளாதளவன்று, இனியென்னாகுவள்! எ-று.

சுற்றம்பயனையுடைத்தன்மையெனினுமமையும். மன்னைப்பு திறென்பதூஉம் பாடம். நேடியபொன்னினெல்பது பாடமாயின், நேடுதல்-தேடுதல். மெய்ப்பாடு-அச்சம். பயன்-தேர்ப்பாகன் மீள்வதற்கொருப்படுதல். (௩௪௬)

## பருவங்கண்டிரங்கல்.

பருவங்கண்டிரங்கலென்பது-ஏறுவரவுகண்டிரக்கமுற்றுவாரா நின்ற தலைமகன், இம்முகில்கள் ஒன்றோடொன்று தம்மில்விரவுதலாற் பொழில்கடோறும் மயில்கள் திரண்டாடாநின்ற இக்கார் காலத்து,அவளென்னை நினைந்தாற்றாளாங்கொல்லோவென அப்பருவங்கண்டிரங்காநிற்றல். அதற்குச்செய்யுள்.

கண்ணுழையாதுவிண்மேகங்கலந்துகணமயிலொக்
கெண்ணுழையாத்தழைகோலிநின்றாலுமினமலர்வாய்
மண்ணுழையாவுமறிதில்லைமன்னனதின்னருள்போற்
பண்ணுழையாமொழியாளென்னளாங்கொன்மன்பாவியற்கே. ()

மன்னியபருவ முன்னியசெலவி னி
இன்னலெய்தி மன்னனேகிய து.

(இ-ள்.) விண்ணிடத்து முகில்கள் ஒன்றோடொன்றுவிரவுதலாற் கண்சென்றுநுழையமாட்டாது இனமலனாயுடையவிடமெங்கும் மயிலினங்கள் திரண்டு எண்சென்றுபுகாத பீலியைவிரித்து நின்றாடாநிற்கும்,மண்ணிடத்தெல்லாவுயிர்களுமறியுந்தில்லையின் மன்னனது இனியவருள் போலும் பண்ணுழையாதமென்மொழியையுடையாள், தீவினையேற்கு எத்தன்மையளாமோ! அறிகின்றிலேன், எ-று.

எண்ணென்பது- உணவாகியவெண்ணெனன்பாருமுளர். பண்ணுழையாமொழியென்பதற்குப் பண்ணப்பட்டவுழையாகிய நரம்புபோலும் மொழியாளெனினுமமையும். மன் - அசைநிலை. மன்னியபருவமுன்னியசெலவினின்னலெய்தி- நிலைபெற்றபருவத்தை முற்பட்டசெலவினான் வருத்தமெய்தி. மெய்ப்பாடும் பயனும்-அவை. (௩௪௭)

## முகிலொடுகூறல்.

முகிலொடுகூறலென்பது- பருவங்கண்டிரங்கி வினைமேல்வாரா நின்றதலைமகன், இவ்விடத்தெல்லாம் முற்பட்டாயாயினும் மு

துபெண்டீர் திரண்டு அவளின்னாமையைநீக்கற்கு இவ்வுறைகட வுட்குப் பூசனைசெய்யாநிற்கும் நீணகரத்திற்கு என்னின் முற்ப டாதொழிவாயாகவென, முந்துற்றுச்செல்லாநின்ற முகிலொடு கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

அற்படுகாட்டினின்றாடிசிற்றம்பலத்தான்மிடற்றின் *
முற்படுநீண்முகிலென்னின்முன்னேன்முதுவோர்குழுமி *
விற்படுவாணுதலாள்செல்லநீர்ப்பான்விரைமலர்தூய் *
நெற்படுவான்பலிசெய்தயராநிற்குநீணகர்க்கே. (௩௱௮)

எனப்பலதுயரமோடேகாநின்றவன்
துனைக்காரதற்குத் துணிந்துசொல்லியது.

(இ-ள்.) மாலைக்காலத்து இருளுண்டாகாநின்றபுறங்காட்டின்க ண் நின்றாடுவான், சிற்றம்பலத்தின்கண்ணான், அவனது மிட றுபோலவிருண்டு முற்படாநின்ற நீண்டமுகிலே, இவ்விடத்தெ ல்லாம் முற்பட்டாயாயினும், முதுபெண்டீர் திரண்டு விற்று மொளிநுதலாளது இன்னாமையை நீக்கவேண்டி நறுநாற்றத்தை யுடைய மலர்களைத்தூவி நெல்விரவிய தூயபலியைக்கொடுத்து இவ்வுறைகடவுட்குப் பூசனைசெய்யாநிற்கும் பெரியவில்லத்திற் கு என்னின் முற்படாதொழி. எ-று.

வான்பலிசெய்தயராநிற்குமென்பதற்குப் பலிகொடுத்துவிரிச் தியபராநிற்குமெனினுமமையும். ஆடுசிற்றம்பலவனென்பதூஉம் பாடம். துனைக்கார்-விரைவையுடையகார். துணைக்காரென்பது பா டமாயின், இனத்தையுடையமுகிலென்றுரைக்க. மெய்ப்பாடு- அ து. பயன்-பாகன்றேரைவிரையக்கடாவுதல். (௩௱௮)

## தேர்வரவுகூறல்.

தேர்வரவுகூறலென்பது- பொருள்வயிற்பிரிந்ததலைமகன் மு கிலெழுவந்துபுகாநிற்ப, இம்முகில் இவளதாவியை வௌவாநின் றகாலத்து ஒருதேர்வந்து காத்தமையான் இனிவரக்கடவதனை வெல்லுமாறில்லையெனத் தோழி தலைமகளுக்குத் தேர்வரவு கூறு நிற்றல். அதற்குச்செய்யுள்.

பாவியைவெல்லும்பரிசில்லையேமுகில்பாவையஞ்சீ *
ராவியைவெல்லக்கறுக்கின்றபோழ்தத்தினம்பலத்துக் *
காவியைவெல்லுமிடற்றோனருளிற்கதுமெனப்போய் *
மேவியமாநிதியோடன்பர்தேர்வந்துமேவினதே. (௩௱௯)

வேந்தன்பொருளொடு விரும்பிவருமென
எந்திழைப்பாங்கி யினிதியம்பியது.

(இ-ள்.) மூங்கில் பாவையத்தழகியசீர்மையையுடையவுயிரைச் செகுப்பான்கருநின்றபொழுதின்கண், அம்பலத்தின்கணுள்ளனாகிய நீலப்பூவைவெல்லு மிடற்றையுடையவனதருள்போலப் போய்த்தேடிய பெருநிதியோடு அன்பர்தேர் கதுமெனவந்துபொருந்திற்று, அதனால் வரக்கடவதனைவெல்லுமாறில்லையேபோலும். எ-று.

இனி ஒருவாற்றானும் இவளுயிர்வாழ்தலரிதென் றிருந்தனம் இதுபாவியாதலின் இற்றைப்பொழுதிகவாது தேர்வந்ததென்னுங்கருத்தாற் பாவியைவெல்லும்பரிசில்லையேயென்றாள். தமியளா அற்றம்பார்த்துவெல்லக்கருதிச் சிலர்வெகுள்கின்றகாலத்து அத்தமியார்க்குத் துணையாயொருதேர்வந்துகாத்ததென வேறுமொருபொருள் விளங்கினவாறறிக. அருளின்மேவியதெனவியையும். அருளான்வந்துமேவிற்றெனினுமமையும். மெய்ப்பாடு- பெருமிதம். பயன்-ஆற்றுவித்தல். (௩௫௪)

## இளையரெதிர்கோடல்.

இளையரெதிர்கோடலென்பது- தோழி தலைமகட்குத் தேர்வரவுகூறிநிற்ப, இந்நிலைமைக்கண், இவளாவிசெல்வதற்குமுன்னே, சூழ்ந்தொகுநிதியோடு அன்பர்தேர் வந்துதோன்றிற்று, இனியூழின்வலியது வேறொன்றுமில்லையெனப் பொருண்முடித்துவாராநின்ற தலைமகனைச் சென்று இளையர் எதிர்கொள்ளாநிற்றல். அதற்குச்செய்யுள்.

யாழின்மொழிமங்கைபங்கன்சிற்றம்பலத்தானமைத்த *
ஊழின்வலியதொன்றென்னையொளிமேகலையுகளும் *
வீழும்வரிவளைமெல்லியலாவிசெல்லாதமுன்னே *
சூழ்ந்தொகுநிதியோடன்பர்தேர்வந்துதோன்றியதே. (௩௫௫)

செறிகழலவன் றிருநகர்புகுத ர
எறிவேலிளைஞ ரெதிர்கொண்டது.

(இ-ள்.) ஒளியையுடையமேகலை தன்னிலையினின் றும்போகாநின்றது, வரியையுடையவளைகள் கழன்றுவிழாநின்றன, இந்நிலைமைக்கண் மெல்லியலுயிர்செல்வதற்குமுன்னே சூழ்ந்துவருந்திரண்டநிதியோடு அன்பரதுதேர் வந்துதோன்றிற்று, அதனான் யாழோசைபோலுமினியமொழியையுடையமங்கையது கூற்றையுடையான், சிற்றம்பலத்தின்கண்ணான், அவனாலமைக்கப்பட்ட ஊ

பூவின்வயின்றோன்றியாது! எ-று.

மெய்ப்பாடு-உவகை. பயன்- மெய்ம்மகிழ்தல். (௩௱௰)

## உண்மகிழ்ந்துரைத்தல்.

உண்மகிழ்ந்துரைத்தலென்பது- பொருண்முடித்து இளைஞரெதிர்கொள்ளவந்து புகுந்த தலைமகன், தலைமகளுடன் பள்ளியிடத்தனாயிருந்து, இம்மானைப்பிரிந்து பொருள்தேட யான்வெய்யசுரஞ்சென்ற துன்பமெல்லாம் இவள்கொங்கைகள் என்னுமுப்புக்களிடை மூழ்க இப்பூவணைமேலணையாமுன்னம் துவள்வுற்றதெனத் தன்னுள்ளே மகிழ்ந்துகூறுநிற்றல் அதற்குச்செய்யுள்.

மயின்மன்னுசாயலிம்மானைப்பிரிந்துபொருள்வளர்ப்பான் *
வெயின்மன்னுவெஞ்சுரஞ்சென்றதெல்லாம் விடையோன்புலியூர்க்
குயின்மன்னுசொல்லிமென்கொங்கையென்னங்கத்திடைக்குளிப்பத்
துயின்மன்னுபூவணைமேலணையாமுன்றுவளுற்றதே. (௩௱௧)

பெருநிதியோடு திருமனைபுகுந்தவ ன்
வளமனைக்கிழத்தியோ டுளமகிழ்ந்துரைத்த து.

(இ-ள்.) மயில்போலுமென்மையையுடைய இம்மானைப்பிரிந்து பொருளையீட்டுவான் வெயினிலைபெற்ற வெய்யசுரத்தைச்சென்ற துன்பமெல்லாம் விடையையுடையவனது புலியூரிடத்துளவாகிய குயிலோசைபோலுஞ்சொல்லையுடையாளுடைய மெல்லியகொங்கைகள் என்னுமுப்புக்களினிடை மூழ்கும்வகை துயினிலைபெறும் பூவணையிடத்தணைவதன்முன்னம் மாய்ந்தது. எ-று.

இம்மானென்றது, பிரிதற்கரியவித்தன்மையளென்றவாறு. எல்லாமென்பது முழுதுமென்னும்பொருள்பட நிற்பதோருரிச்சொல். பன்மையொருமைமயக்கமென்பாருமுளர். மெய்ப்பாடும்பயனும்-அவை. பயன் மகிழ்வித்தலுமாம். (௩௱௨)

பொருள்வயிற்பிரிவு முற்றிற்று.

---

## பரத்தையிற்பிரிவு.

---

இனிப் பரத்தையிற்பிரிதலென்பது- தலைமகளைவரைந்தெய்தியபின்னர், வைகலும் பாலைநுகர்வானொருவன் இடையே புளிங்காடியுநுகர்ந்து அதனினிமையறிந்தாற்போல, அவனுகர்ச்சியினிமையறிதற்குப் புறப்பெண்டீர்மாட்டுப் பிரியாநிற்றல். அல்லதூஉம், பண்ணும்பாடலுமுதலாயின காட்டிப் புறப்பெண்டி

ர் தன்னைக்காதலித்தாற் றனெல்லார்க்குந் தலைவனாகலின் அவர்க்கு மின்பஞ்செய்யப் பிரியாநிற்றலென்றுமாம். அல்லதூஉம், தலைமகளோடூடலறிவித்தற்குப் பிரிதலென்றுமாம். இவ்வாறொழிந்து தனக்கின்பம்வேண்டிப்பிரிவனாயின், "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு- மொண்டொடி கண்ணே யுள" என்பதனால், இவனுக்குத் தலைமகனென்னும்பெயரோடுமாறுபட்டுத் தனது பெருமையோடு மாறுபடாநிற்கும்.

அது வருமாறு- சூத்திரம். கண்டவர்கூறல் காதற்றோழி, பொறையுவந்துரைத்தல் பொதுப்படக்கூறி, வாடியழுங்கன் மாறுகொண்டலறொடு, கனவிழந்துரைத்தல் விளக்கொடுவெறுத்தல், வாரம்பகர்ந்து வாயின்மறுத்தல், பள்ளியிடத்தூடல் பணிமொழியாடன், செவ்வணிவிடுக்கவில்லோர்கூற, வியலறிவுரைத்தவளழுக்கமெய்தல், செவ்வணிகண்ட வாயிலவர்கூறன், மனைபுகல்கண்ட வாயிலவர்கூறன், முகமலர்ச்சிகூறன் முனிவதென்னெனக், காலநிகழ்வுரைத்தல் கலவியெய்தலை, யெடுத்துரைத்தலொடு கலவிகருதிப், புலத்தல் குறிப்பறிந்து புலந்தமைகூறல், வாயிலவர்வாழ்த்தல் புனல்வரவுரைத்த, னேர்கண்டுமகிழ்தல் சேடியர்விழவிற், றம்முளுரைத்த றன்னைவியத்த, னகைத்துரைத்தலொடு நாண்கண்டுரைத்தல், பாணன்வரவுரைத்தல் பாங்கியியற்பழித்த, லுரியற்பழித்த லொண்ணுதலாள்வற், இயற்படமொழித லியல்புணர்ந்துரைத்தல், வாயில்பெறாது மகன்றிறநினைதல், வாயிற்கணின்று தோழிக்குரைத்தல், வாயில்வேண்டத் தோழிகூறன், மன்னியதோழி வாயில்வேண்டன், மனையவர்மகிழ்தல் வாயின்மறுத்தல், பாணனொடுவெகுடல் பாணன்புலத்தல், விருந்தொடுசெல்லத் தணிந்தமைகூற, லாடறணிவித்த லணைந்தவழியூடல், புனலாட்டுவித்தமை கூறிப்புலத்தல், கலவிகருதிப் புலவிபுகறன், யிருத்துறைத்தாடல் விறல்வேற்காளை, யூடனீட வாடியுரைத்த, றனிமொழித்துரைத்த றகவொன்றில்லரீப், புதல்வன்மேல்வைத்துப் புலவிதீர்தல், கலவியிடத்தூடன் முன்னிகழ்வுரைத்தல், பரத்தையைக்கண்டமை பயன்படக்கூற, லுறியமெடுத்துரைத் தூடறீர்த்த, லென்றொன்றிலவ பரத்தையிற்பிரிவெனப், பண்ணார்மொழியாய் பகர்ந்திசினோரே.

(இ-ள்.) கண்டவர்கூறல்- பொறையுவந்துரைத்தல்- பொதுப்படக்கூறிவாடியழுங்கல்- கனவிழந்துரைத்தல்- விளக்கொடுவெறுத்தல்- வாரம்பகர்ந்துவாயின்மறுத்துரைத்தல்- பள்ளியிடத்தூடல்

செவ்வணிவிடுக்க வில்லோர்கூறல்- அயலறிவுரைத்தவளழுக்கமெ
ய்தல்-செவ்வணிகண்டவாயிலவர்கூறல்- மனைபுகல்கண்டவாயிலவ
ர்கூறல்-முகமலர்ச்சிகூறல் -காலநிகழ்வுரைத்தல்- எய்தலெடுத்து
ரைத்தல்- கலவிகருதிப்புலத்தல் -குறிப்பறிந்துபுலந்தமைகூறல்-
வாயிலவர்வாழ்த்தல்-புனல்வரவுரைத்தல்- தேர்வரவுகண்டுமகிழ்ந்
துகூறல்-புனல்விளையாட்டிற் றம்முளுரைத்தல் -தன்னைவியந்து
ரைத்தல்-நகைத்துரைத்தல்- நாணுதல்கண்டுமிகுத்துரைத்தல்-பா
ணன்வரவுரைத்தல்-தோழியியற்பழித்தல்-உழையரியற்பழித்தல்-
இயற்படமொழிதல்-நினைந்துவியந்துரைத்தல்-வாயில்பெறுதும
கன்றிறநினைதல்- வாயிற்கணின்றுதோழிக்குரைத்தல்- வாயில்வே
ண்டத்தோழிகூறல்-தோழிவாயில்வேண்டல்- மனையவர்மகிழ்தல்
வாயின்மறுத்துரைத்தல்-பாணனொடுவெகுடல் - பாணன்புலந்து
ரைத்தல்-விருந்தொடுசெல்லத்துணிந்தமைகூறல்- ஊடறணிவித்
தல்-அணைந்தவழியூடல்- புனலாட்டுவித்தமைகூறிப்புலத்தல்-கல
விகருதிப்புலத்தல்-மிகுத்துரைத்தூடல்- ஊடனீடவாடியுரைத்த
ல்- துனிமொழிந்துரைத்தல்-புதல்வன்மேல்வைத்துப்புலவிதீர்த
ல்- கலவியிடத்தூடல்- முன்னிகழ்வுரைத்தூடறீர்த்தல்- பரத்தை
யைக்கண்டமைகூறிப்புலத்தல் - ஊடியமெடுத்துரைத்தூடறீர்த்
தல் என விவை நாற்பத்தொன்பதும் பரத்தையிற்பிரிவாம்.எ-று.
அவற்றுள்;—

## கண்டவர்கூறல்.

கண்டவர்கூறலென்பது- தலைமகன் பரத்தையர் சேரிக்கட்செ
ல்லாநிற்ப, அப்பரத்தையர் அவனை ஒருங்கெதிர்கொண்டு சுற்று
ம்பற்றிப்போர்செய்யாநின்றமையின், இஃதிவன்காதலிமாட்டெ
ன்றுமென அவ்விடத்துக், கண்டவர் தம்முட்கூறுநிற்றல். அதற்
குச்செய்யுள்.

உடுத்தணிவாளரவன்றில்லையூரன்வரவொருங்கே *
யெடுத்தணிகையேறினவளையார்ப்பவிளமயிலேர் *
கடுத்தணிகாமர்கரும்புருவச்சிலைகண்மலரம் *
படுத்தணிவாளிளையோர்சுற்றும்பற்றினர்மாதிரமே. (௩௱௨)

ஊரத்தகுவேலோன் பரத்தையிற்பிரிய த்
தெண்டேர்வீதியிற் கண்டோருரைத்த து.

(இ-ள்.) கச்சாகவும் உடுத்தணியாகவுமணிந்த வாளரவையுடை
யவனது தில்லைக்கணுளனாகியவூரன் இவ்வீதிக்கண்வர, தெரிந்த்

ணியப்பட்ட கைக்கணுளவாகிய இனவளைகளொலிப்ப, இளமயி லைசெழிலையொத்து, மிக்கவழகையுடைய கரியபுருவமாகியவில் லோடு கண்மலராகியவம்பைச்சேர்த்தி, அணிகளுண்டாகியவொ ளியையுடைய மகளிர் ஒருங்கே சுற்றுந்திசைகளைப்பற்றினர், இ வ்விடத்திவன்காதலிமாட்டென்னாய்! எ-று.

அணி காமர் என்பன ஒருபொருட்கிளவியாய், மிகுதிதோன் ற நின்றன. ஒன்றாகவெழுந்து அணியினுங் கையினுமுளவாகிய சங்கொலிப்ப இளமைக்கணுண்டாகிய வுள்ளவெழுச்சிமிக்கு வி ல்லோடம்பையடுத்துப் பற்றி அணைக்கணியப்பட்ட வுடைவாளை யுடைய இளையோர் திசைமுழுதுஞ்சூழ்ந்து பற்றினரெனப் பி றிதும்மோர்பொருடோன்றி நின்றவாறுகண்டுகொள்க. கருப்புரு வச்சிலையென்பது பாடமாயின், புருவமாகியகாமனது உட்கை யுடையகருப்புச்சிலையோடு கண்ணாகிய கள்ளையுடையமலரம்பை யடுத்தென்றுரைக்க. சுற்றும்பற்றியமாதிரமென்பது பாடமாயி ன், சுற்றும்பற்றி மேவாநிற்ப, அவ்விடத்து நகைக்குறிப்பாலெடு க்கப்பட்டு இவர்கைகள் வளையொலிப்பத் தலைமேலேறினவென க் கூட்டியுரைக்க. இதற்குச் சுற்றும்பற்றிப் போர்செய்யாநிற்ப ப் படைக்கலமெடுத்துச் சங்கொலிப்ப அணியுங்கையுமொருங் கெழுந்தனவெனப் பிறிதுமொருபொருளாகக்கொள்க. இதற்கு ப் பிறவுரைப்பாருமுளர். உரத்தகுவேல் - உரத்தாற்றக்கவேல். மெய்ப்பாடு-மருட்கை, வியப்பாகலின். பயன்-பிரிவுணர்த்துதல்.

## பொறையுவந்துரைத்தல்.

பொறையுவந்துரைத்தலென்பது - தலைமகளைப்பரத்தையரொ திர்கொண்டமைகேட்டதலைமகள் நெஞ்சுடைந்து புறத்துவெளி ப்படாமற்பொறுத்தமைகண்டதோழி, யானிவ்வாறுசவும் கலங் காதுநின்றபெரும்பொறையாட்டியை யான் இன்றுபேசுவனெ ன்னென்று அவளையுவந்துகூறுநிற்றல். அதற்குச் செய்யுள்.

கரும்புறுகொன்றையன்றொல்புலியூர்ச்சுருங்குமருங்குற் *
பெரும்பொறையாட்டியையென்னின்றுபேசுவபேரொலிநீர்க் *
கரும்புறையூரன்கலந்தகன்றானென்றுகண்மணியு *
மரும்பொறையாகுமென்றுவியுந்தேய்வுற்றழிகின்றதே. (௬௫௩)

கள்ளவிழ்கோதையைக் காதற்றோ ழி
உள்ளவிழ்பொறைகண் டுவந்துரைத்த து.

(இ-ள்.) பெரியவொலிக்குநீரையுடைய கரும்புதங்குமூரையு டையவன் கலந்துவைத்துநீங்கினானென்று கருதுதலான் என்க

ண்மணியும் பயனின்மையாற் றுஞ்சுதற்கரிய பாரமாகாநின்றன, எனதுயிருந் தேய்ந்தழியாநின்றது, யானிவ்வாறாகவுங் கலங்காது நின்ற பெரும்பொறையையுடையவளே யான் இன்றும்பேசுவனே வன்! எ-று. சுரும்புகள்வாழுங்கொன்றைப்பூவினையுடையானது பழையதாகியபுலியூரிற்சுருங்கினமருங்குலையுடையபெரும்பொறைபாட்டியையெனக்கூட்டுக.

என்கண்மணியுந்தேய்வுற்றழியாநின்றது ஆவியுமரும்பொறையாகாநின்றதென்று கூட்டுவாருமுளர். உள்ளவிழ்ப்பொறை-நெஞ்சுடைந்துபுறத்துவெளிப்படாதபொறை. மெய்ப்பாடு- அழுகையைச்சார்ந்தவுவகை. பயன்-தலைமகளைவியத்தல். (௨௱௰௩)

## பொதுப்படக்கூறிவாடியழுங்கல்.

பொதுப்படக்கூறிவாடியழுங்கலென்பது - பொறையுவந்துரைத்ததோழிக்கு, முன்னிலைப்புறமொழியாக, தமது நலங்கவரக்கொடுத்து வேறுதுணையின்மையிற் றமதணையையே தமக்குத்துணையாகக்கொண்டுகிடந்து என்னைப்போலவுயிர்தேய்வார் இனியுளரோவெனப் பொதுப்படப் பரத்தையர்க் கிரங்குவாள்போன்று, தலைமகனது கொடுமைநினைந்துவாடாநிற்றல். அதற்குச்செய்யுள்.

அப்புற்றசென்னியன் றில்லையுறாரினவருறுநோ *
யொப்புற்றெழினலமூரன்கவரவுள்ளும்புறம்பும் *
வெப்புற்றுவெய்துயிர்ப்புற்றுத்தம்மெல்லணையே துணையாச் *
செப்புற்றகொங்கையர்யாவர்கொலாருயிர்தேய்பவரே. (௨௱௰௪)

பொற்பிகழாவன் மற்பிகழ்தில்லைப்
பிரிந்தவூரனோ டிருந்துவாடியது.

(இ-ள்.) நீரடைந்தசென்னியையுடையவனது தில்லையை மனமொழிமெய்களாலணுகாதாரைப்போலக் கண்ணோட்டமின்றி எழிலையுடைய நலத்தை ஊரன்கவர்ந்துகொள்ள, அத்தில்லையுறாருறுநோயையொத்து அகத்தும்புறத்தும் வெப்பத்தையுற்று, வெய்தாகவுயிர்த்தலையுற்று, வேறுதுணையின்மையிற் றமது மெல்லணையே தமக்குத்துணையாகச் செப்புப்போலுங்கொங்கையையுடையமகளிர் ஆருயிர்தேய்வார் பிறர்யாரோ யானல்லது. எ-று.

இத்தன்மையராய் என்போல இனி யாருயிர்தேய்வார் யாரோவெனப் பரத்தையர்க்கிரங்குவாள்போன்று, தலைமகனது கொடுமைகூறினாளாகவுணர்க. தில்லையுறாதவருறுநோயென்பது பாட

மாயின், எழினலூரன்கவரத் தில்லையையுறாத அத்தீவினையாருறு நோயையொத்தென்றுணர்க. ஊரனோடிருந்து வாடியது- ஊரன்குறைகளைநினைந்து அதனோடிருந்துவாடியது. மெய்ப்பாடு- அழுகை. பயன்-ஆற்றாமைநீங்குதல். (௩௱௪)

## கனவிழந்துரைத்தல்.

கனவிழந்துரைத்தலென்பது-தலைமகனதுகொடுமைநினைந்து கிடந்து வாடாநிற்றதலைமகள், கனவிடைவந்து அவன்மார்புதாத் தானதனை நனவென்றுமயங்கிப் புலந்து அவனோடுபுணராதிழந்தமையைத்தோழிக்குச்சொல்லாநிற்றல் . அதற்குச்செய்யுள்.

தேவாசுரரிறைஞ்சுங்கழலோன்றில்லைசேரலர்போ *
லாவாகனவுமிழந்தேனனவென்றமளியின்மேற் *
பூவாரகலம்வந்தூரன்றரப்புலம்பாய்நலம்பாய் *
பாவாய்தழுவிற்றிலேன்விழித்தேனரும்பாவியனே. (௩௱௫)

சினவிற்றடக்கைத் தெம்புனலூரனை த்
கனவிற்கண்ட காரிகையுரைத்தது.

(இ-ள்.) நலம்பரந்தபாவாய், அமளியின்கண் மாலையையுடைய மார்பை ஊரன்வந்துதர, அவனோடுமேவாமையிற் பின்னுந்தனிமையாய், நனவென்றுமயங்கித் தவறுநினைந்து புல்லிற்றிலேன், அத்துணையேயன்றிப் பொறுத்தற்கரிய தீவினையையுடையேன் விழிப்பதுஞ்செய்தேன், அதனால், தேவருமசுரருமிறைஞ்சுங்கழலையுடையவனது தில்லையைச்சேராதாரைப்போல, ஐயோ! கனவானவருமின்பத்தையுமிழந்தேன். எ-று.

தில்லைசேரலர்போலென்புழி ஒத்தபண்பு - துன்பமுறுதலும் இன்பமிழத்தலுமாம். (௩௱௫)

## விளக்கொடுவெறுத்தல்.

விளக்கொடுவெறுத்தலென்பது-கனவிழந்தமைகூறி வருந்தாநின்ற தலைமகள், நீயாயினுங் கலந்தவர்க்குப்பொய்ம்முகங்காட்டிக் கரத்தல் பொருத்தமன்றென்றிலையேயென விளக்கொடு வெறுத்துக்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

செம்முகநீலமலர்தில்லைச்சிற்றம்பலத்தாற்குக் *
கைம்முகங்கூம்பக்கழல்பணியாரிற்கலந்தவர்க்குப் *
பொய்ம்முகங்காட்டிக்கரத்தல்பொருத்தமன்றென்றிலையே *
நெய்ம்முகமாந்தியிருண்முகங்கீழ்நெடுஞ்சுடரே. (௩௱௬)

பஞ்சணைத்துயின்ற பஞ்சின்மெல்ல டி
அன்பனோடூடுங்கிச் செஞ்சுடர்க்குரைத்த து.

(இ-ள்.) நெய்ம்முகத்தைப்பருகி இருண்முகத்தைக் கிழிக்கும் நெடியசுடரோ, எம்மைக்கலந்தவர்க்குப் பொய்யையுடையமுகத்தைக்காட்டித் தெளிந்தாரைவஞ்சித்தல் தகுதியன்றென்றுகூறிற்றிலையே, வேறுகூறுவார் யாவர். எ-று. செய்ம்முகத்துளவாகிய நீலப்பூ மலராநின்ற தில்லையிற்சிற்றம்பலத்தின்கணுளனாகிய அரனுக்குக் கைம்முகங்குவியக் கழலைப்பணியாதாரைப்போலக் கண்ணோட்டமும் மெய்ம்மையுமின்றிக் கரத்தலெனக்கூட்டுக.

செய்ம்முகம்-செய்ம்முன். கைம்முகம்-கைத்தலம். கரத்தல்-மறைத்தலெனினுமமையும். நெய்ம்முகம்- சுடராயவணைந்தவிடம். நெய்ம்முகமாந்தி யிருண்முகங்கீழ் நெடுஞ்சுடரோ என்றது உணவாகியநெய்யை மாந்தி மேனியொளியை யுடையையாய்ப் பகைசெகுக்கும் பெருமையையுடையையாதலின் அக்களிப்பினாற்கண்டதுகூறிற்றிலை. எ-று. இவையிரண்டற்கும் மெய்ப்பாடும் பயனும்-அவை. (௩௬௬)

## வாரம்பகர்ந்துவாயின்மறுத்துரைத்தல்.

வாரம்பகர்ந்துவாயின்மறுத்துரைத்தலென்பது- விளக்கொடு வெறுத்துவருந்தாநின்றதலைமகள், தலைமகன் பரத்தையிற்பிரிந்துவந்து வாயிற்கணிற்ப, வண்டோரனையர் ஆடவர், பூவோரனையர் மகளிராதலான், நாமும் அவன்றலையளிபெற்றபொழுது வந்துக்கொள்வதன்றே நமக்குக்காரியம், நாம் அவனோடுபுலக்கற்பாலேமல்லேமென்று வாயினேர்வித்தார்க்கு, ஊரனது மாலையுந்தோளும் அவ்விடத்துவளைத்துவைத்து வேண்டினார்கொள்ளவமையும் யான் மன்னனைப் பரத்தையர்க்கு உறுவரையாகக்கொடுத்தேனென மறுத்துக்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

பூங்குவளைப்பொலி மாலையுமூரன்பொற்றோளிணையு *
மாங்குவளைத்துவைத்தாரேனுங்கொள்கநள்ளாரரணந் *
தீங்குவளைத்தவில்லோன்றில்லைச்சிற்றம்பலத்தயல்வா *
யோங்குவளைக்கரத்தார்க்கடுத்தோமன்னுறுவரையே. (௩௬௭)

வார்புனலூரனேர்திகழ்தோள்வயி ற்
கார்புரைகுழலி வாரம்பகர்ந்த து.

(இ-ள்.) பொலிவையுடைய குவளைப்பூவானியன்ற பெரியமாலையையும் ஊரனது பொன்போலுந்தோளிணையையுந் தம்மில்லத்துவளைத்துவைத்து வேண்டியார்கொள்வாராக, பகைவரதரணந்

நின்செய்த வளைக்கப்பட்ட வில்லையுடையவனாகிய தில்லையிற்சிற்றம்பலத்தாக்கபலாகியவிடத்துவாழும் உயர்ந்த வளையையுடைய கையையுடையார்க்கு மன்னனே உருவனையாகக் கொடுத்தோம். எ-று.

உருவனா - மூற்றாட்டு. நீங்குவளைத்தவில்லோனென்பதற்குத் தீங்கெய்தவென ஒருசொல்வருவியாது அரணத்தலைத்தீங்குவளைத்தற்குக்காரணமாகியவில்லென்றுரைப்பினுமமையும். ஓங்குவளைக்கரத்தாரென்புழி- ஓங்குதலை வளைக்கரத்தார்மேலேற்றுக. விலையாவுயர்ந்தவளையெனினுமமையும். அடுத்தோமென்றதனை, தனதிலைபகூறினாளாம். மன் - அசைநிலையாக்கி, மாலையுந்தோளையுமடுத்தோமெனினுமமையும். மெய்ப்பாடும் பயனும் - அவை. ()

## பள்ளியிடத்தாடல்.

பள்ளியிடத்தாடலென்பது - வாயின்மறுத்ததலைமகள், ஆற்றாமையே வாயிலாகப் புக்குப் பள்ளியிடத்தானாகிய தலைமகனோடும், நின்னையிடைவிடாதுநுகர்தற்கு முற்காலத்துத் தவத்தைச்செய்யாத தீவினையேனை நோவாது, இன்றிவ்வாறாகிய நின்னை நோவதென்னோ, அதுகிடக்க, நின்காதலிமார் பறம்பகற்று நினக்குப்புதிதாகச்செய்த அப்புல்லுதலை யாஞ்செய்யமாட்டேம், அதனாலெம்மைத்தொடாதே, எங்கலையைவிடுவாயாகவெனக் கலவிகருதிப் புலவாநிற்றல். அதற்குச்செய்யுள்.

தவஞ்செய்திலாதவெந்தீவினையேம்புன்மைத்தன்மைக்கெள்ளா *
தவஞ்செய்துநின்றினியின்றுனை நோவதெனத்தன்முத்தன் *
சிவஞ்செய்தசீரருளார்தில்லையூரநின்சேயிழையார் *
நவஞ்செய்தபுல்லங்கண்மாட்டேந்தொடல்விடுநற்கலையே (௩௱௮

பீடுவர்கற்பிற் றேடுவர்கோ    தை
ஆடவன்றன்னோடூடியுரைத்த    து.

(இ-ள்.) உலகத்துள்ளாரெல்லார்க்குந் தந்தை, இயல்பாகவே பாசங்களினீங்கியவன், எவ்வுயிர்க்கும் எப்பொழுதும் நன்மையைச் செய்தலாற் சிவன், அவனாற்செய்யப்பட்ட சீரியவருணிறைந்த தில்லையிலூரனே, முற்காலத்துத் தவத்தைச்செய்யாத வெய்யதீவினையையுடைய யாம் நின்னுலாதரிக்கப்படாத எமதுபுன்மைத்தன்மைகாரணமாக எம்மையேயிகழாது, நினக்குத்துன்பத்தைச் செய்யாநின்று இப்பொழுது இனிநின்னை நோதலென்னோ! அதுகிடக்க, நின்னுடைய சேயிழையார் நினக்குப்புதிதாகச்செய்தபுல்லல்களை யாமாட்டேம், அதனால் எமது நல்லமேகலையைத் தொடாதொழி, விடுவாயாக. எ-று.

எவ்வம்- எவ்வமெனநின்றது. காதலில்லையாயினுங் கண்ணோட்டமுடைமையான் இகழ்ந்துவாளாவிருப்பமாட்டாமையின், எம்புலிவியான் நினக்குத்துன்பமாந்துணையே யுள்ளதென் னுங்கருத்தான், எவஞ்செய்துநின்றென்றாள். இனியென்பது- நீயிவ்வாறுயினி யின்னொன்றும்பொருட்டாய் நின்றது. சிவன்செய்தசீருளார்தில்லையூரவென்றதனான், நின்னாற்காயப்பட்டாராயினுங் காதலிக்கப்படாநின்றுவெனவும், தவஞ்செய்திலாதவெந்தீவினையேமென்றதனான், எம்மாற்காதலிக்கப்பட்டாராயினுங் காயப்படாநின்றேமெனவுங் கூறியவாறும். புல்லென்பது புல்லமெனவிரிந்துநின்றது. புல்லமென்பதனைப் புன்மையென்று நின்சேயிழையார் புதிதாகச்செய்தகுறிகளைப் பொறுக்கமாட்டேமென் னுரைப்பினுமமையும். எவஞ்செய்துநின்றெனப்பாடமோதி, தவஞ்செய்திலாதவெந்தீவினையேம் இன்றன்னேரோவது என்செய்துநின்றென்றும் என்னத்தவென் றுரைப்பாருமுளர். எள்கலெத்ஙபதாஉம் பாடம். மெய்ப்பாடு-வெகுளி: பயன்-புணர்தல். (௩௱௯)

## செவ்வணிவிடுக்கவில்லோர்கூறல்.

செவ்வணிவிடுக்கவில்லோர்கூறலென்பது-இக்கொங்கைகள் தாங்கித் தளராநின்ற மருங்குலையுடைய இவள் வருந்த, இவ்வாயத்தார் முன்னே, அப்பரத்தையர்மனைக்கண் இப்பேதை இக்குறியறிவிக்கச்செல்லாநின்றவிது நமக்குமிகவும் இளிவரவுடைத்தெனச் செவ்வணிவிடுக்கவிளையாநின்றவில்லோர் தம்முட்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

தணியுறப்பொங்குமிக்கொங்கைகடாங்கித்தளர்மருங்குல் *
பிணியுறப்பேதைசென்றின்றெப்துமாலர்வும்பிறையு *
மணியுறக்கொண்டவன்றில்லைத்தொல்லாயநல்லார்கண்முன்னே *
பணியுறத்தோன்றுநுடங்கிடையார்கள்பயின்மனைக்கே. (௩௱௰)

பாற்செலுமொழியார் மேற்செலவிரும்ப ல்
பொல்லாதென்ன வில்லோர்புகன்ற து.

(இ-ள்.) பிறைக்குப்பகையாகிய அரவையும் பிறையையும் அழகுறத் தனக்கணிபாகக்கொண்டவனது தில்லையிற் பழைய இளையத்தினுள்ளாராகிய நல்லார்கண்முன்னே அரவுபோலத் தோன்றும் நுடங்குமிடையையுடையார்கள் நெருங்கும் பரத்தையர்மனைக்கண், தணிதலுறும்வண்ணம் வளராநின்ற இக்கொங்கைகளைத் தாங்கித் தளராநின்ற மருங்குலையுடைய இவள் வருந்த இப்

பேதை இன்றுசென்றெய்துமாயிற் பெரிதும் இஃதிளிவரவுடைத்து. எ-று.

இதற்குப் பிறிதுரைப்பாருமுளர். பாற்செலு மொழியார்- புகன்றது - கேட்டார்க்குப் பாலின்கணுணர்வு செல்லுமொழியையுடைய மகளிர்மேற்சென்று தூறுவிடவிரும்பல் பொல்லாதென இல்லோர்கூறியது. பால்போலுமொழியெனினுமமையும். நண்ணுச்செல்லுமென்பது உவமைச்சொல். பேதையென்றது-செவ்வணியணிந்துசெல்கின்றமாதனை. மெய்ப்பாடு-நகை, எள்ளற்பொருட்டாகலின். பயன்- தலைமகளைச்செலவழுங்குவித்தல். சிறைப்புறத்தானாக, இல்லோர்சொல்லியது. (௩௱௩)

## அயலறிவுரைத்தவளழுக்கமெய்தல்.

அயலறிவுரைத்தவளழுக்கமெய்தலென்பது- இல்லோர் செவ்வணிவிடுக்கநினையாதிற்ப, அயலார்முன்னே இவளால் இக்குறியறிந்தவிடத்து ஒருத்தி நமக்குத்தர நாமவனையெய்தும்படியாயிற்று நம்முடையபெண்டன்மையென அயலறிவுரைத்துத் தலைமகள் அழுக்கமுற்றுக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

இரவணையும்மதியேர்நுதலார்நுதிக்கோலஞ்செய்து *
குரவணையுங்குழலிங்இவளாலிக்குறியறிவித் *
தரவணையுஞ்சடையோன்றில்லையூரனையாங்கொருத்தி *
தரவணையும்படிசாயினவாறுநந்தன்மைகளே. (௩௱௪)

உலகியலறியச் செலவிடுற் று
விழுத்தகைமாதர்க் கழுக்கஞ்சென்ற து.

(இ-ள்.) இரவைச்சேரும்பிறைபோலு நுதலையுடையாரது முன் செவ்வணியாகியகோலத்தைச்செய்து, குரவம்பூச்சேருங்குழலையுடைய இவளால் இக்குறியையறிவித்து, பாம்புசேருஞ்சடையையுடையவனது தில்லையிலூரனைப் பின் அவ்விடத்து ஒருத்தி நமக்குத்தர, நாமவனையெய்தும்படியாயினவாறென் நம்முடையபெண்டன்மைகள். எ-று.

நுதலார்நுதியறிவித்தெனவியையும். குறி-பூப்புநிகழ்தற்குறி. மெய்ப்பாடு-அழுகை. பயன்-ஆற்றாமைநீங்குதல். (௩௱௫)

## செவ்வணிகண்டவாயிலவர்கூறல்.

செவ்வணிகண்டவாயிலவர்கூறலென்பது- தலைமகளிடத்துநின்றுஞ் செவ்வணிசெல்லக்கண்டு, நம்மூரற்கு உலகியலாறுணாய்ப

ன்வேண்டி, செம்மலருஞ் செம்பட்டுஞ் செஞ்சாந்தும் நமதுதிருவையுடையமனையின்கண் வந்துதோன்றினவெனப் பரத்தைவாயிலவர் தம்முண்மதித்துக்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

சிவந்தபொன்மேனி மணிதிருச்சிற்றம்பலமுடையான் *
சிவந்தவந்தாளணியூரற்குலகியலாறுரைப்பான் *
சிவந்தபைம்போதுமஞ்செம்மலர்ப்பட்டுங்கட்டார்முலைமேற் *
சிவந்தவஞ்சாந்தமுந்தோன்றினவந்துதிருமனைக்கே. (ருசுக)

மணிக்குழைபூப்பிய லுணர்த்தவற்
றுயிழையைக்கண்ட வாயிலவருணர்த்தது.

(இ-ள்.) செம்பொன்போலுமேனியையுடையமணி,திருச்சிற்றம்பலத்தையுடையான்; அவனது சிவந்தவழகியதாள்களைமுடிக்கணியாக்கும் ஊரற்கு,உலகியனெறியையறிவிப்பான்வேண்டி,நமது திருவையுடையமனைக்கட் சிவந்தசெவ்விப்பூவும், அழகியசெய்யபூந்தொழிற்பட்டும், கட்டுதலார்ந்தமுலைமேலுண்டாகியவழகியசெய்யசாந்தமும்,வந்துதோன்றின,இனித் தருமக்குறைவாராமல் ஊரற்கும் ஏகல்வேண்டும். எ-று.

உலகியலாறு-பூப்பு. உணர்த்தாற்போலச் செவ்வணியாலறிவித்தலின் உரைப்பானென்றார். தாளிணையூரற்கென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு-பெருமிதம். பயன்-பூப்புணர்த்துதல். (ருசுக)

## மனைபுகல்கண்டவாயிலவர்கூறல்.

மனைபுகல்கண்டவாயிலவர்கூறலென்பது - செவ்வணிகண்டதலைமகன் பரத்தையிடத்திநின்றும் வந்து தடையின்றி மனைவயிற்புகுதாநிற்ப, பண்டிரவும்பகலும் வாயில்பெறாது நின்றணங்கும் இக்காவலையுடையகடையை இத்துணைக்காலத்திற்கழித்துவாயிலின்றிப் புகுதாநின்றான், மனைக்கடன்பூண்டலான் இனிப்புலந்து அடங்காதார் ஒருவருமில்லையெனத் தலைமகள்வாயிலவர் தம்முட் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

குராப்பயில்கூழைபிவளின்மிக்கம்பலத்தான்குழையா *
மராப்பயினுண்ணிடையாரடங்காரெவரேயினிப்பண் *
டிராப்பகனின்றணங்கீங்கடையித்துணைப்போழ்திற்சென்று *
காராப்பயில்பூம்புனலூரன்புகுமிக்கடிமனைக்கே. (ருசுஉ)

கடனறிந்தூரன் கடிமனைபுகுதர
வாய்ந்தவாயிலவ ராய்ந்துணர்த்தது.

(இ-ள்.) மூன்றுகாலத்து இரவும்பகலுந் தான் வாயில்பெறுதநின்று வாடும் இக்குளிர்ச்சியையுடையகடையை நீட்டியாது இத்துணைக்காலத்திற்கழிந்து காம்பயில்கின்ற பூம்புனலையுடையவூரையுடையான் இக்காவலையுடையமனைக்கட் புகாநின்றான், அதனாற் சுராப்பூப்பயின்றகுழலையுடைய இவளினும் மேம்பட்டு அம்பலத்தான் குழையாகிய அரவுபோலும் நுண்ணியவிடையினையுடையார் புலந்தடங்காதார் இனி யாவர்! மனைக்கடன் பூண்டலான் எல்லாருமடங்குவர். எ-று. (௩௱௨)

காம்பயிலென்பது காப்பயிலென்னவலித்துநின்றது. மெய்ப்பாடு-உவகை. பயன்-மெய்ம்மகிழ்தல்.

## முகமலர்ச்சிகூறல்.

முகமலர்ச்சிகூறலென்பது-பரத்தையிற்பிரிந்ததலைமகன் செவ்வணிகண்டுவந்தானென்றுசொல்லுமளவில், தலைமகளது கண்கள்சிவந்தன, அப்புலவிநோக்கத்தெதிர் காதலனோக்க, அச்சிவப்பாறி முகமலர்ந்தன்மையை அவ்விடத்துக்கண்டவர் தம்முட்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

வந்தான்வயலணியூரனெனச்சினவாண்மலர்க்கண் *
செந்தாமரைச்செவ்விசென்றசிற்றம்பலவன்னருளான் *
முந்தாயினவியனோக்கெதிர்நோக்கமுகமடுவிற் *
பைந்தாட்குவளைகள்பூத்திருள்சூழ்ந்துபயின்றனவே. (௩௱௩)

பூம்புனலூரன் புகமுகமலர்ந்
தேம்புனைகோதை திறம்பிறருரைத்தது.

(இ-ள்.) வந்தான் வயலணிந்தவூரனென்றுசொல்லுமளவில் சினவாள்போலுமலர்க்கண்கள் சிவந்ததாமரைப்பூவினது செவ்வியையடைந்தன, சிற்றம்பலவனதருளான் முன்னுண்டாகிய பெரிய அப்புலவிநோக்கெதிர் காதலனோக்க, கதுமெனப் பின் முகமாகிய மடுவிற் பைந்தாளையுடையகுவளைப்பூக்கள் மலர்ந்திருண்டு நெருங்கின, என்னவில்லறக்கிழத்தியோ! எ-று.

இயனோக்கென்றுபிரித்து முன்னுண்டாகிய தனித்தலியல்பையுடைய நோக்கென்றுரைப்பினுமமையும். கண்களதுசிறப்பின்மையாற் குவளைப்பூக்கள் பல கூடினாற்போன்றிருந்தனவென்பது போதா, பயின்றனவென்றார். காதலனோடு பழகினவெனினுமமையும். தலைமகற்குப் புலவிக்காலத்துவருந்துன்பமிகுதியும் புலவிநீக்கத்துவருமின்பமிகுதியும் நோக்கி, சிற்றம்பல

வனருளாலெனக்காரணத்தை யிகுத்துக்கூறினார். மெய்ப்பாடும் பயனும்-அவை. (௩௭௩)

## காலநிகழ்வுரைத்தல்.

காலநிகழ்வுரைத்தலென்பது-பரத்தையிற்பிரிந்து வந்ததலைமகனது ஆற்றாமையைத் தலைமகள் நீக்காதிருப்ப, வண்டூதுமல்லிகைப்போதானும் அந்திப்பிறையானுஞ் சங்குற்பொழுதானும் ஆற்றானாய்ப்புகுதராநின்றான் இனி நீ புலக்கற் பாலையல்லையென உழையர் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

வில்லிகைப்போதின்விரும்பாவரும்பாவியர்களன்பிற்
செல்விகைப்போதினெரியுடையோன்றில்லையம்பலஞ்சூழ்
மல்லிகைப்போதின்வெண் சங்கம்வண்டூதவிண் டோய்பிறையோ
டெல்லிகைப்போதியல்வேல்வயலூரற்கெதிர்கொண்டதே. ௩௭௩

இகழ்வதெவன்கொ லிகழ்வதிவ்வாறெனச்
செழுமலர்க்கோதை யுழையருரைத்தது.

(இ-ள்.) காமன்கையிலம்பாகியபூக்களில் ஆதரமில்லாத அரிய குறிப்பையுடையவர்கள் தனக்குச்செய்த அன்பின்கண்வேட்டுச் செல்வோன், கையாகியபூவின்கணுளதாகிய எரியையுடையான், அவனது தில்லையம்பலத்தைச் சூழ்ந்த மல்லிகையின்போதாகிய வெண்சங்கை வண்டுகளூத விண்ணையடைந்த பிறையோடு இராப்பொழுது கையாகியபூவின்கணியலும் வேலையுடைய வயலூரற்கு மாறுகொண்டது. எ-று.

என்றது-வண்டூதுமல்லிகைப்போதானும் அந்திப்பிறையானுஞ் சங்குற்பொழுதானும் ஆற்றானாய்ப் புகுதராநின்றான் இனி நீ புலக்கற்பாலையல்லையென வாயினேர்வித்தவாறு. விலவிகைப்போதாற் புலன்களைவிரும்பாத அரும்பாவியரெனினுமமையும். கைப்போதின்கண்ணேயெரியையுடையானெனினுமமையும். இகழ்தல்- தலைமகனாற்றாமைநீக்காதிருத்தல். எல்லி ஊரற்குவாயிலாக வேற்றுக்கொண்டது புலவாதுண்ணெகிழ்ந்தாளென்றிவளை நாமிகழ்கின்றதென் இதுவன்றோ பொழுதென உழையர் தம்முட்புறங்கூறினாராகவுரைப்பினுமமையும். மெய்ப்பாடு- பெருமிதம். பயன்-தலைமகளைச்சிவப்பாற்றுவித்தல். (௩௭௪)

## எய்தலெடுத்துரைத்தல்.

எய்தலெடுத்துரைத்தலென்பது-பரத்தையிற்பிரிந்துவந்ததலைமகன், பூப்புநிகழ்ந்தகிழத்தியைப் புலவிதீர்த்து இன்புறப்பண்

ணி எய்தலுற்றுமகிழ்ந்தமையை அவ்விடத்துள்ளார் எடுத்துக்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

புலவித்திரைபொரச்சீறடிப்பூங்கலஞ்சென்னியுய்ப்பக் *
கலவிக்கடலுட்கலிங்கஞ்சென்றெய்திக்கதிர்கொண்முத்த *
நிலவிநிறைமதுவார்தம்பலத்துநின்றோனருள்போன் *
றுலவியலாத்தனஞ்சென்றெய்தலாயினவூரனுக்கே. (௩௯௫)

சீரிய னுலகிற் றிகழ்தரக்கூ டி
வார்புன லூரன் மகிழ்வுற்ற து.

(இ-ள்.) புலவியாகியதிரை வந்துமாறுபடக் காதலி சிற்றடியாகிய பொலிவினையுடையவணியைத் தன்சென்னியிலுய்த்தலான் அப்புலவிநீங்க,கலவியாகியகடலுள் துகிலைச்சென்று பற்றி,எயிறாகியவொளிபொருந்தின முத்தின்கட் பொருந்தி நிறைந்த நீராகியமதுவைப் பருகி, அம்பலத்துநின்றவனதருளையொத்து ஒருஞான்றுந் தளர்தலில்லாதமுலைகள் ஊரற்குச் சென்றுபெறலாயின. எ-று.

புலவுதாவித் திரைகள்வந்துமோதச் சிறியவடியையுடையபொலிவையுடையமரக்கலத்தைக் கடலின்சென்னியிலேசெலுத்தக் கடலுட்கலந்து கலிங்கமாகியதேயத்தைச்சென்றெய்தி ஒளிபொருந்தியமுத்துக்கள் தன்கண்வந்துநிலைபெற அவ்விடத்துள்ளமதுக்களை நுகர்ந்து அம்பலத்துநின்றவனதருளையொத்து ஒருஞான்றுங்கேடில்லாதபொருள் சென்றெய்தலாயினவென வேறுமொருபொருள்விளங்கியவாறறிக. சீரியனுலகிற்றிகழ்தரக்கூடி - சீர்மையியன்றவுலகினுள்ளவின்பமெல்லாவற்றினும் விளங்கக்கூடி. சீரியவுலகு- தேவருலகுமாம் இதுவுந்துறைகூறியகருத்து. மகிழ்வுற்றதென இன்னுர் கூற்றென்னுது துறைகூறினுர்.மெய்ப்பாடு-உவகை. பயன்-மெய்ம்மகிழ்தல். (௩௯௫)

## கலவிகருதிப்புலத்தல்.

கலவிகருதிப்புலத்தலென்பது - புலவிதீர்த்து இன்புறப்புணரப்பட்டு மயங்காநின்ற தலைமகள், தனக்கவன்செய்ததலையளியை நினைந்து, இவ்வாறருளுமருள் ஒருஞான்று பிறர்க்குமாமெனவுட்கொண்டு பொருமியழுது, பின்னுமவனோடு கலவிகருதிப் புலவாநிற்றல். அதற்குச்செய்யுள்.

செவ்வாய்துடிப்பக்கருங்கண்பிறழச்சிற்றம்பலத்தெம் *
மொய்வார்சடையோனருளின்முயங்கிமயங்குகின்றுன் *

வெவ்வாயுயிர்ப்பொடுவிம்மிக்கலுழ்ந்துபுலந்துறைந்தா *
ளிவ்வாறருள்பிறர்க்காகுமெனநினைந்தின்னகையே. (௩௯௬)

மன்னியவுலகிற் றுன்னியவன்பொடு
கலவிகருதிப் புலவியெய்திய து.

(இ-ள்.) இன்னகையையுடையாள், செய்யவாய்துடிப்பக் கரிய கண்கள்பிறழச் சிற்றம்பலத்தின்கணுளனாகிய எம்முடைய தெருநிதிய நீண்டசடையையுடையவனதருள்பெற்றவர்போல முயங்கி இன்பக்களியின்மயங்குகின்றவள், இவ்வாறு நமக்கருளுமருள் ஒருஞான்று பிறர்க்குமாமென ஒன்றனையுட்கொண்டு, வெய்யவிடத்தையுடைய நெட்டுயிர்ப்போடுபொருமியழுது, புலந்து வருந்தினாள். எ-று.

அருளின்முயங்குகின்றாளென்புழி அருள்பெற்றவர் உவமையாதல் ஆற்றலான்வந்தது. அருளான் முயங்கியென்பாருமுளர். வெவ்வாயுயிர்ப்பென்பது-கலுழ்கட்சின்னீ ரென்பதுபோல நின்றது தவறுபற்றிப்புலப்பளென்றுநீகூறுதி இதுவன்றோ இவள் புலக்கின்றவாறெனத் தோழிக்குத்தலைமகன் கூறியது மன்னியவுலகிற் றுன்னியவன்பொடு- நிலைபெற்றவுலகத்தின்வைத்துச்செறிந்தவன்போடு. இதுவுந்துறைகூறியகருத்து. மெய்ப்பாடு-உவகையைச்சார்ந்தவெகுளி. பெருமிதமுமாம் பயன்- அது.

## குறிப்பறிந்துபுலந்தமைகூறல்.

குறிப்பறிந்துபுலந்தமைகூறலென்பது- புலவிதீர்ந்து கலுழ்ந்துபுணர்ந்து தானுமவனுமேயாய்ப் பள்ளியிடத்தாளாகிய தலைமகள், பின்னுமொருகுறிப்புவேறுபாடுகண்டு புலந்து, இப்பள்ளி பலவைப்பொருதென்றிழிய, இப்பொழுது இவளிவ்வாறிழிதற்குக் கருதியகுறிப்பென்னைகொல்லோவென உழையர் தம்முட் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

மலரைப்பொருவடிமானுந்தமியன்மன்னனொருவன் *
பலவைப்பொருதென்றிழிந்துநின்றாள்பள்ளிகாமனெய்த *
வலரைப்பொருகன்றழலவிழித்தோனம்பலம்வணங்காக் *
கலரைப்பொருசிறியாளென்னைகொல்லோகருதியதே. (௩௯௭)

குறிப்பினிற்குறிப்பு நெறிப்படநோக் கி
மலர்நெடுங்கண்ணி புலவியுற்ற து.

(இ-ள்.) மன்னன் ஒருவன், மென்மையான்மலரையும் பொருத வடிவையுடையமானுந்தமியளே, ஆயினும், இப்பள்ளிபலவைத்தா

கொதென்றுகூறிப் பள்ளியினின்றுமிழிந்துநின்றான், காமனைநு அலரம்பைவெருண்டு அன்றழலாகியகண்ணை விழித்தவனதம்பலத்தை வணங்காத தீயமக்களைப்பொருத சிறியவள் இந்நிலைமைக்கட்கருதியதென்றோ! எ-று.

இழிந்துநின்றானென்பது விரையவிழிந்தானென்பது படநின்றது. கலைப்பொருச்சிறியாளென்றது- தீமக்களென்றசொல்லும்வார்த்தையையும் பொறுக்கவள் தீமக்கள்செய்யுங் காரியத்தைச்செய்தாளென்றவாறு. குறிப்பினிற்குறிப்பென்றது- இவ்வாறருள் பிறர்க்காகுமெனநினைந்து இன்னாமைகைபுலர்ந்தாளென்று தலைமகன்கூறியகூற்றையே தவறாகநினைந்து நம்மையொழிந்துபிறருமுண்டாகக்கூறினானாகலான் இத்தவமன்றி பலவைப் பொருதெனப்புந்தாள் குறிப்பாலே தலைமகனது குறிப்பையறிந்து. இவ்வகை தலைமகள்புலம்ப வாயில்கடம்முட்சொல்லியது. இதுவுமது. மெய்ப்பாடு-மருட்கை. பயன்- ஐயந்தீர்தல். பள்ளியிடத்தாளாகிய தலைமகள் நுண்ணிதாகியதோர்காரணம்பற்றி இவ்வகையுரைத்திருடக்கண்டதோழி தன்னெஞ்சொடுசாவினளென்பது. தலைமகன் றன்னெஞ்சொடுசாவினனெனின், அதுபொருந்தாது. (௩௱௭)

## வாயில்வர்வாழ்த்தல்.

வாயில்வர்வாழ்த்தலென்பது- செவ்வணிவிடுக்கப் பூப்பியற்செவ்விகெடாமல் மெலிவறிந்து இவளதுபொலிவோடு வந்தமையான் இவன் மெய்யே தக்கவாய்மையனெனத் தலைமகனை வாயிலவர் வாழ்த்தாநிற்றல். அதற்குச்செய்யுள்.

வில்லைப்பொலிநுதல்வேற்பொலிகண்ணிமெலிவறிந்து *
வல்லைப்பொலிவொடுவந்தமையானின்றுவான்வழுத்துந் *
தில்லைப்பொலிசிவன்சிற்றம்பலஞ்சிந்தைசெய்பவரின் *
மல்லைப்பொலிவயலூரன்மெய்யேதக்கவாய்மையனே. (௩௱௮)

தலைமகனது தகவுடை மை
நிலைதகுவாயி லின்றேருரைத்த து.

(இ-ள்.) விற்போலுநுதலையும் வேல்போலுங்கண்களையுமுடையாளது வாட்டமறிந்து விரைய இவளதுபொலிவோடு வந்தமையால், வானத்துள்ளார் நின்றுவழுத்துந் தில்லைக்கட்பொலியுஞ்சிவனது சிற்றம்பலத்தைக்கருதுவாரைப்போல வளத்தாற்பொலியும் வயலையுடையவூரையுடையவன் மெய்யாக நல்லமெய்ம்மையன்; எ-று.

வில்லையென்னு மகாரம் இசைநிறையாய்வந்தது. காதலிவர இவள் இடையின்றிப்பொலிந்தமையாற் பொலிவொடென ஒடுக்கொடுத்துக் கூறினர். பொலிசிற்றம்பலமெனவினையும். மல்லல்கடைக்குறைந்து ஐகாரம்விரிந்துநின்றது. மல்லற் பொலிவெனப்பதூஉம் பாடம். மெய்ப்பாடு-உவகை. பயன்-மகிழ்தல். (௧௧௮)

## புனல்வரவுரைத்தல்.

புனல்வரவுரைத்தலென்பது- தலைமகளுடன் மனைவயிற்றங்கியின்புறுநின்றவனது தோள்களைப் பரத்தையர்பொருந்திமகிழப்புதுப்புனல்வந்துபரந்தது, இனிப்புனலாட்டினுல் இவன்காதலிபுலக்கும்போலுமென,வையத்தார் தம்முட்புனல்வரவுகூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

சூன்முதிர்துள்ளுநடைப்பெடைக்கிற்றுணைச்சேவல்செய்வானூ
றேன்முதிர்வேழத்தின்மென்பூக்குதர்செம்மலூரன்றிண்டோண்
மான்முதிர்நோக்கினல்லார்மகிழத்தில்லையானருளே
போன்முதிர்பொய்கையிற்பாய்ந்ததுவாய்ந்தபுதுப்புனலே. ()

புனலாடுகவெனப் புணர்ந்துகொண்டு
மனைபுகுந்தவனை வையமுரைத்தது.

(இ-ள்.) சூன்முதிர்ந்த துள்ளுநடையையுடைத்தாகிய பெடைக்கு ஈனுமில்லைச்செய்யவேண்டித் துணையாகியசேவல், தேன்போலுஞ்சாறுமுதிர்ந்தகரும்பினது மெல்லியபூவைக்கோதுந்தலைமையையுடையவூரனது திண்ணியதோள்களை மானினதுநோக்கம்போலுநோக்கினையுடைய நல்லார்கூடி இன்புற, தில்லையானருளையொத்து நீர் முதிர்ந்தபொய்கையுள் நல்லபுதுப்புனல் பாய்ந்தது, இனிப்புனலாட்டினுற் றன்காதலியைச் சிவப்பிக்கும்போலும். எ-று.

சூன்முதிர்தலாற் குறுகவடியிடுதலிற் றுள்ளுநடையென்றார். தில்லையானருள்பெற்றவர்போல நல்லார்மகிழவென்றுரைப்பாருமுளர். சேவலன்னந் தன்சூன்முதிர்ந்தபெடைக்கு ஈனில்விழைத்துப் பாதுகாக்கின்றாற்போல இவனுந்தன்காதலிக்கு வேண்டுவனசெய்து மனைவயிற்றங்கியின்புறுகின்றானென உள்ளுறையுவமை கொள்க. துன்னுநடையென்றுபாடமோதி, சூன்முதிர்தலாற்பயிலவடியிடுநடையென்றுரைப்பாருமுளர். வெண்பூவென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு-பெருமிதம். பயன்-பிரிவுணர்த்துதல். ()

## தேர்வரவுகண்டுமகிழ்ந்துகூறல்.

தேர்வரவுகண்டுமகிழ்ந்துகூறலென்பது- புனல்வரவுகேட்டத

தலைமகன் புனலாட்டுவிழவிற்குப் பரத்தையர் சேரிக்கட்செல்லாநிற்ப, இவனைப் புணர்தற்குத்தக்க தவத்தினை முற்காலத்தே செய்தீர்கள், தேர்வந்துதோன்றிற்று; இனிச்சென்று இவன்றன்தோளிணையைத் தோய்மினென்னத் தேர்வரவுகண்டு பரத்தையர் தம்முண் மகிழ்ந்துகூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

சேயேயெனமன்னுதீம்புனலூரன்றிண்டோளிணைக *
டோயீர்புணர்தவந்தொன்மைசெய்தீர்சுடர்கின்றகொலந் *
தீயேயெனமன்னுசிற்றம்பலவர்தில்லைந்நகர்வாய் *
வீயேயெனவடியீர்நெடுந்தேர்வந்துமேவினதே. (௩௭௰)

பயின்மணித்தேர்செலப் பரத்தையர்சேரிக்
கயன்மணிக்கண்ணியர் கட்டுரைத்தது.

(இ-ள்.) சுடராநின்றவடிவு தீயேயென்றுசொல்ல நிலைபெற்ற சிற்றம்பலவரது தில்லைநகரிடத்துள்ளீராகிய பூவையொக்குமடியையுடையீர், நெடியதேர் ஈண்டுவந்துமேவிற்று, இவனைப்புணர்தற்குத் தக்கதவத்தைமுற்காலத்துச்செய்தீர்கள்; வடிவு முருகவேளேயென்றுசொல்ல நிலைபெறாநின்ற இனியபுனலையுடைத்தாகிய ஊரையுடையவனது திண்ணியதோளிணைகளையினியணைமின். எ-று.

ஒன்றற்கொன்றிணையாயிருத்தலின் இணையெனத் தனித்தனிகூறப்பட்டன. இதுவும் ஊடனிமித்தம். கோலமெனற்பாலது கொலமெனக்குறுகிநின்றது. கயன்மணிக்கண்ணியென்பது பாடமாயின், பரத்தையர்சேரிக்கட்டலைமகனது தேர்செல்லத் தலைமகளுரைத்ததாம்; இப்பொருட்கு நெடுந்தேர் நமதுசேரிக்கண்வந்து தங்கிற்றென்றுரைக்க. மெய்ப்பாடு - உவகை. பயன் - தலைமகன்வரவு சேரிப்பரத்தையர்க்குப் பாங்காயினார் அவர்க்குணர்த்தல். (௩௭௰)

## புனல்விளையாட்டிற்றம்முளுரைத்தல்.

புனல்விளையாட்டிற்றம்முளுரைத்தலென்பது - தலைமகனுடன் புனலாடாநின்றபரத்தையர் சேடிமார் அரமங்கையரைப்போலப் புனலாடாநின்ற அவ்வவரோவென்று விளித்து, நாமெல்லாமித்தன்மையேமாக வானரமங்கையரொன்றுசொல்லும்வண்ணம் மற்றொருத்திவந்து இவனைத்திரித்துக்கொள்ளக்கொடுத்துப் பின்வருந்தாது முன்னுறக்காப்போமெனத் தம்முட்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

அரமங்கைகளெனவந்துவிழாப்புகுமவ்வவர்வா *
னரமங்கையரெனவந்தணுகும்மவளன்றுகிராற் *
சிரமங்கயனைச்செற்றோன்றில்லைச்சிற்றம்பலம்வழுத்தாப் *
புரமங்கையரினையாதையல்காத்துநம்பொற்பணையே. (கூஎக)

தீம்புனல்வாயிற் சேயிழைவருமெனக்
காம்பனதோளியர் கலந்துகட்டுரைத்தது.



(இ-ள்.) அரமங்கையரைப்போலவந்து புனல்விழவின்கட் புகாநின்ற அவ்வவரோ, நாமெல்லாம் இத்தன்மையேமாக வானிடத்தரமங்கையரென்றுகருதும்வண்ணம் அவள் வந்தணுகாநின்றாள், அணுகித் தன்னிடத்திவரைத்திரிப்ப, அன்று அவ்விடத்து உகிரால் அயனைச் சிரந்தடிந்தவனது தில்லையிற்சிற்றம்பலத்தை வழுத்தாத புரங்களில் மங்கையரைப்போலப் பின்வருந்தாது, நம்பொற்பணை வியப்பமுன்னுடைத்தாகக் காப்பேம். எ-று.

அரமங்கையர்-தேவப்பெண்களுக்குப்பொதுப்பெயர். வானரமங்கையரென்றது அவரின்மேலாகிய உருப்பசி திலோத்தமை முதலாயினாரை. வானரமங்கையரென்றது சாதியை நோக்கிநின்றது. ஐயபொற்பணையெனக்கூட்டினுமமையும். அவளென்றதும் சேயிழையென்றதும் பரத்தையரிற்றலைவியாகிய இப்பரத்தையை. "பரத்தைவாயி லெனவிரு வீற்றும் - கிழவோட் சுட்டாக் கிளப்புப்பய னிலவே" என்பதனால் இது கிழவோட்சுட்டாக்கிளப்பாயினும், இப்பரத்தையரது மாறுபாடு தலைமகளோடுதற்குறித்தமாகலிற் பயனுடைத்தாம். மெய்ப்பாடு - அச்சம். பயன்- தலைமகனைத்தங்கட்டாழ்வித்தல். (கூஎக)

## தன்னைவியந்துரைத்தல்.

தன்னைவியந்துரைத்தலென்பது-சேடிமார் பின்வருந்தாது முன்னுறக்காப்பேமென்று தம்முட் கூறுவதனைக்கேட்டு, இவனை அமரப்புல்லும்பரத்தையர்மாட்டு இவனருள்செல்லாமல் விலக்கேனாயின் என் மாட்டிவனைத்தந்தழாநின்ற இவன்மனைக்கிழத்தியாகின்றேனெனப் பரத்தைத்தலைவி தன்னைவியந்துகூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

கனலூர்கணைதுணையூர்கெடச்செற்றசிற்றம்பலத்தெம் *
மனலூர்சடையோனருள்பெற்றவரினமரப்புல்லு *
மினலூர்நகையவர்தம்பாலருள்விலக்காவிடினியான் *
புனலூரனைப்பிரியும்புனலூர்கணைப்பூங்கொடியே. (கூஎஉ)

அரத்தத்துவர்வாய்ப் பரத்தைத்தலை வி
முனிவுதோன்ற நனிபுகன்ற து.

(இ-ள்.) கனல்பரந்தகணையான் ஒத்தவூர்கெட வெகுண்டசிற்றம்பலத்தின்கணுள்ளனாகிய எம்முடைய அனலையொக்குஞ்சடையையுடையவனதருளைப்பெற்றவர்போலச் செம்மாந்து அவனைச்செறியப்புல்லாநின்ற ஒளிபரந்தநகையையுடையவர் தம்மிடத்து அவனருள்செல்லாமை விலக்கேனாயின், யான் புனலூரனைப்பிரிந்திருக்கும் புனல்பரக்குங்கண்ணையுடைய அயன்பனைக்கிழத்தியாகிய அப்பூங்கொடியாகின்றேன். எ-று.

கணைதுணையெனச் செய்யுளின்பநோக்கி மிகாதுநின்றது. கணையென்பதனை யெழுவாயாக்கி யுரைப்பாருமுளர். "பரத்தையிற்பிரிவே நிலத்திரி வின்றே," என்பதனால், இவரதில்லந் தம்மில்வேறுபாடில்லாமையறிக. மெய்ப்பாடு- வெகுளி. பயன்- தனதுமீடுணர்த்தல். (௩௭௨)

## நகைத்துரைத்தல்.

நகைத்துரைத்தலென்பது-பரத்தைத்தலைவி தன்னை வியந்து தங்கிளென்று கேட்டதலைமகள், எங்கைச்சியார்தமக்கும் ஒருதங்கைச்சியார்தோன்றினபொழுதே தம்மிறுமாப்பொழியத் தம்முடைய இணைமுலைகளினதிறுமாப்பும் ஒழியப்புகாநின்றன, இதனையறியாது தம்மைத்தாம் வியக்கின்றதென்னோவெனப் பரத்தையைநோக்கி நகைத்துக்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

இறுமாப்பொழியுமன்றேதங்கைதோன்றினென்னெங்கையஞ்
சிறுமான்றரித்தசிற்றம்பலத்தான்றில்லையூரன்றிண்டோள் [கைச்
பெறுமாத்தொடுந்தன்னபேரணுக்குப்பெற்றபெற்றியினோ *
டிறுமாப்பொழியவிறுமாப்பொழிந்தவிணைமுலையே. (௩௭௩)

வேந்தன்பிரிய வேந்திழைமடந் தை
பரத்தையைநோக்கி விரித்துரைத்த து.

(இ-ள்.) அங்கைக்கண்ணே சிறியமானைத்தரித்தசிற்றம்பலத்தானது தில்லைக்கணுள்ளனாகிய ஊரனுடைய திண்ணியதோள்களைப்பெறுதலானுண்டாகிய பெருமையோடுந் தன்னவாகிய அவ்வாறுண்டாகிய பெரிய அணுக்கைப்பெற்ற தன்மைகளோடுந் தான் செம்மாத்தலையொழிய, இணைமுலைகள் ஏந்துதலையொழியப்புகாநின்றன, இனித் தனக்கொருதங்கைதோன்றின், என்னுடையவெங்கையும் செம்மாத்தலையொழியுமன்றே, அதனான் வருவதறியாது தன்னைப்புகழ்கின்றாள். எ-று.

எங்கையென்றது- என்றங்கையென்றவாறுயினும், என்னெங்கையென இயையபுமிகுதிகூறி நகையாடினாள். மாத்து - தலைமகற்குரியளாய்நிற்றலான் உண்டாகியவரிசை. பெற்றி - அணுக்காற்றன்னை மதித்தல். தன்னைபெற்றியெனவியையபும். பெற்றியினேடுமென்னுமும்மை தொக்குநின்றது. ஒழிந்தவென்னுமிறந்தகாலம் விரைவுபற்றிவந்தது. மெய்ப்பாடு - வெகுளியைச்சார்ந்தவழுகை. பயன் - பரத்தையதுசிறுமையுணர்த்துதல். அவ்வகை பரத்தைகூறியவஞ்சினம் தன்பாங்காயினாற்கேட்டதலைமகள் பரத்தைக்குப்பாங்காயினார்கேட்ப இவ்வகைசொன்னாளென்பது. ()

## நாணுதல்கண்டுமிகுத்துரைத்தல்.

நாணுதல்கண்டுமிகுத்துரைத்தலென்பது- தலைமகனைப் பரத்தையர்வசம் புனலாடவிட்டுச் சூடுவாரின்றிச் செப்பின்கணிட்டடைத்துத் தமியேவைகும்பூப்போல்வாள் இஃதவனுக்குத் தகாதபழியாமெனக்கருதி நாணி அதனைமறைத்திருந்தமை கண்டதோழி, இவளதுகற்பும்நலனும் நல்லபகுதியையுடையனவாயிருந்தனவென அவள் நலத்தை மிகுத்துக்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

வேயாதுசெப்பினடைத்துத்தமிவைகும்வீயினன்ன *
தீயாடிசிற்றம்பலமனையாடில்லையூரனுக்கின் *
றேயாப்பழியெனநாணியென்கண்ணிங்ஙனேமறைத்தாள் *
தாயாமியல்பிவள்கற்புநற்பாலவியல்புகளே. (௩௭௬)

மன்னவன்பிரிய நன்மனைக்கிழத்தி யை
நாணுதல்கண்ட வாணுதலுரைத்த து.

(இ-ள்) சூடாது செப்பின்கணிட்டடைப்பத் தனியேவைகும் பூவைப்போலுந் தீயின்கணாடுவானது சிற்றம்பலத்தையொப்பாள், தில்லையூரனுக்கு இன்று தகாதபழியாமெனக்கருதி நாணித் தனதாற்றாமையை என்னிடத்துய் இவ்வண்ணமே மறைத்தாள், அதனால் இவளதுகற்பு நமக்குத் தாயாமியல்பையுடைத்து, இவளுடையநாணமுதலாகியவியல்புகள் நல்லகூற்றன. எ-று.

தமிவைகும்வீ- அக்காலத்தினிகழ்ந்த வேறுபாட்டிற்குவமை. அம்பலம் - இயற்கைநலத்திற்குவமை. பாணனுரைத்ததென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு- அழுகை. பயன்-தலைமகளதுபெருமையுணர்த்துதல். (௩௭௭)

## பாணன்வரவுரைத்தல்.

பாணன்வரவுரைத்தலென்பது - நாணேடுதனியிருந்துவருந்தா நின்றதலைமகளுக்கு, இராப்பொழுதின்கட்சென்று திசையைக்க டக்கும் வாவல் இரைதேருங்காலமன்மையாற் பகற்பொழுதின்க ணுறையும் மரம்போலுந் தமியோமையறியாது விறலியும்பா ணனும் நம்வேந்தற்குத் துயிலெழுமங்கலம் பாடவந்து நின்று ரெனத்தோழி பாணன்வரவு கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

விறலியும்பாணனும்வேந்தற்குத்தில்லையிறையமைத்த *
திறலியல்யாழ்கொண்டுவந்துநின்றார்சென்றிராத்திசைபோம் *
பறலியல்வாவல்பகலுறைமாமரம்போலுமன்னே *
உறலியல்கூழைநல்லாய்தமியோமையறிந்திலரே. (கூஎகு)

இலவேல்வனகல் வறியாப்பாணனை ப்
பூங்குழன்மாதர்க்குப் பாங்கியகர்ந்த து.

(இ-ள்.) விறலியும்பாணனும் தில்லையிறையாலமைக்கப்பட்ட வெற்றியியலும்யாழை நம்வேந்தற்குத் துயிலெழுமங்கலம்பாடக் கொண்டுவந்துநின்றார்கள், அறல்போலுங்கூழையையுடையந ல்லாய், இராப்பொழுதின்கட்சென்று திசையைக்கடக்கும் பறத் தலாகிய வியல்பினையுடைய வாவல் இரைதேருங்காலமன்மையாற் பகற்பொழுதின்கணுறையும் பெரியமரம்போலும் இராப்பொ ழுதிற்றுணையில்லாதோமை இவரறிந்திலர்போலும் எ-று.

வெற்றி-வீணைகளுட்டலையாதல். "எம்மிறைநல்வீணைவாசிக்கு மே" என்பவாகலின் இறையமைத்தயாழென்றார். சென்றுபகலு றைமாமரமென்றியைப்பினுமமையும். பறத்தல் - பறலெனஇ டைக்குறைந்துநின்றது. போலவென்பது பாடமாயின், பகலு றையுமாமரம்போலத் தமியேமாகிய நம்மையெனவுரைக்க. மன் னும்-ஒவும் அசைநிலை. மெய்ப்பாடு-அது. பயன்- பாணனும்வி றலியும் வரவுணர்த்திச் சிவப்பாற்றுவித்தல். என்னை, இவர் வந்து நின்றதற்குத் தலைவி நம்மை இவர்நகையாடியவந்தாரென்று முனித்தாளாகத் தோழி இவரவன்செயலையறிந்தாரல்லரென்றும், த லைவர்க்கியல்பு நம்மிடத்துவருதலும் அவரிடத்துச்சேறலுமென வும் இயல்புசொல்லுதலாற் சிவப்பாற்றுவித்தாளாம். (கூஎகு)

## தோழியியற்பழித்தல்.

தோழியியற்பழித்தலென்பது-பாணன்வரவுரைத்ததோழி, இ

வள்வருந்த அயலாரிடத்து நல்குதலால் எம்முடையவள்ளல் இன்றுதக்கிருந்திலனெனத் தலைமகனையியற்பழித்துக்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

திக்கின் இலங்குதிண்டோளிறைதில்லைச்சிற்றம்பலத்துக் *
கொக்கினிறகணிந்துநின்றாடிதென்கூடலன்ன *
அக்கின்னகையிவளையவயல்வயினல்குதலாற் *
தக்கின்றிருந்திலனின்றசெவ்வேலெந்தனிவள்ளலே. (௫௭௬)

தலைமகனைத் தகவிலனென ச்
சிலைநுதற்பாங்கி தீங்குசெப்பிய து.

(இ-ள்.) திக்கின்கண் விளங்காநின்ற திண்ணியதோள்களையுடையவிறைவன், தில்லையிற்சிற்றம்பலத்தின்கட் கொக்கினிறகதனையணிந்துநின்றாடுவான், அவனது தெற்கின்கணுண்டாகிய கூடலையொக்கும் அக்குமணிபோலும் இனியநகையையுடைய இவள் வருந்த அயலாரிடத்துநல்குதலால், எல்லாராலுமறியப்பட்டுநின்ற செவ்வேலையுடைய எம்முடையவொப்பில்லாதவள்ளல் இன்றுதக்கிருந்திலன். எ-று.

அயல்வயினென்பதற்குப் பொருணசையுள்ளத்தராகலிற் காமத்திற்கயலென்றுரைப்பினுமமையும். தலைமகனது தகவின்மையென்பதூஉம்பாடம். (௫௭௬)

## உழையரியற்பழித்தல்.

உழையரியற்பழித்தலென்பது-தோழி தலைமகனையியற்பழித்துக்கூறுநிற்பக் கேட்டு, தன்மாட்டன்புடைநெஞ்சத்தலைதயுடையவிவள்பேதுற இதற்குப்பிரியாமையின் வயலூரன் வரம்பிலனென உழையர் அவனையியற்பழித்துக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

அன்புடைநெஞ்சத்திவள்பேதுறவம்பலத்தடியா *
ரென்பிடைவந்தமிழ்ந்தாறநின்றாடியிருஞ்சுழியற் *
றன்பெடைநையத்தகவழிந்தன்னஞ்சலஞ்சலத்தின் *
வன்பெடைமேற்றுயிலும்வயலூரன்வரம்பிலனே. (௫௭௭)

அரத்தவேலண்ணல் பரத்தையிற்பிரிய க்
குழைமுகத்தவளுக் குழையருரைத்த து.

(இ-ள்.) அடியவரென்புகளிடையே அமிழ்தம்வந்தூற அம்பலத்தின்கண்ணே நின்றாடுவோனது பெரியசுழியலின்கண் தன்

பெடைவருந்தத் தகுதிகெட்டு அன்னஞ் சலஞ்சலத்தினதுவலிய பெடைமேற்கிடந் துறங்கும் வயலாற்சூழப்பட்ட ஊரையுடையவன் தன்மாட்டன்பையுடையநெஞ்சத்தையுடைய இவள் மயங்கதீர்ப இதற்குப்பிரியாமையிற் றகவிலன். எ-று.

அன்புடைநெஞ்சத்திவளென்றதனால், பரத்தையரதன்பின்மை கூறப்பட்டதாம். இருஞ்சுழிபலூரெனவியையும். சுழிபலென்பது-ஒருதிருப்பதி. வன்பெடையென்றதனாற் பரத்தையரது வன்கண்மை விளங்கும் ஒருசொல்வருவியாது பேதுறுதலசன் வரம்பிலனென் றுரைப்பாருமுளர் உள்ளுறையுவமம் வெளிப்படநின்றது. இவையிரண்டற்கும் மெய்ப்பாடு - அழுகையைச்சார்ந்தநகை. பயன்-தலைமகனையியற்பழித்துத் தலைமகளையாற்றுவித்தல்.()

## இயற்படமொழிதல்.

இயற்படமொழிதலென்பது- தலைமகனையியற்பழித்தவர்க்கு, அன்றுநம்பொருட்டாக நம்புனத்தின்கண்ணே மாந்தழையேந் திவந்தார் இன்று என்னெஞ்சத்தின்கண்ணார், அதுகிடக்க, மறந் துறங்கினேனாயின் அமளியிடத்துவந்து எம்பயோதரத்தைப் பிரியாதார், இத்தன்மையாரை நீங்கள்கொடுமைகூறுகின்றதென் னேவெனத் தலைமகள் அவனையியற்படமொழியாநிற்றல். அதற் குச்செய்யுள்.

அஞ்சார்புரஞ்செற்றசிற்றம்பலவர்தண்கயிலை *
மஞ்சார்புனத்தன் றுமாந்தழையேந்திவந்தாரவரென் *
னெஞ்சார்விலக்கினு நீங்கார்நனவுகனவுமுண்டேற் *
பஞ்சாரமளிப்பிரிதலுண்டோவெம்பயோதரமே. (௧௭௮)

வரிசிலையூரன் பரிசுபழித் து
உழையர்கேட்ப வெழினகையுரைத்த து.

(இ-ள்.) இறைவனென்று உட்காதாருடைய புரங்களைக்கெடுத் த சிற்றம்பலவரது அழகியகுளிர்ந்தகயிலைக்கண் மஞ்சார்ந்தபு னத்தின்கண் அன்று மாந்தழையையேந்திவந்தாராகிய அவர் இ ன்று நனவின் என்னெஞ்சத்தின்கண்ணார், யான்றடுப்பினும் அவ் விடத்தினின்று நீங்கார், துயிலுமுண்டாயிற் பஞ்சார்ந்தவமளிக் கண் எம்பயோதரத்தைப் பிரிதலுண்டோ! நீர் கொடுமைகூறுகி ன்றதென்! எ-று.

அஞ்சார்-தறுகண்மையெனினுமமையும். தழையேந்திவந்தாரெ ன்பதனை முற்றென்று, இளிவந்தனசெய்து நம்மைப்பாதுகாத்த

தார் இன்றிவ்வாறேரு ழுகுவரொன்றாைப்பினுமமையும். கனவுமு ண்டேலென்பதற்குத் துயில்பெற்றுக் கனுக்காணின்னென் றுரைப் பினுமமையும். எனது நெஞ்சாரென்பதூஉம் ஊரணப்பரிசபதி த்தவென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு-பெருமிதம். பயன்- தலை மகளையியற்படமொழிந்தாற்றுதல். (௬எ அ)

## நினைந்துவியந்துரைத்தல்.

நினைந்துவியந்துரைத்தலென்பது - புனலாடப்பிரிந்து பரத்தையிடத்தொழுகாநின்ற தலைமகன், யான்றன்னைநினையாது வேறொன்றன்மேல் உள்ளத்தைச்செலுத்தும்வழியும் தானென்னை நினைந்து என்னுள்ளம்புகாநின்றாள், அவ்வாறன்றி யான்றன்னை நினையுந்தோறும் பள்ளத்துப்புகும்புனல்போல நிறுத்தலரிதாய் என்மனத்தாளாகாநின்றாள், ஆதலாற் பிரிந்துநீண்டிருத்தல் மிகவுமரிதெனத் தலைமகளைநினைந்து வியந்துகூறாநிற்றல். அதற்குச் செய்யுள்.

தெள்ளம்புனற்கங்கைதங்குஞ்சடையன்சிற்றம்பலத்தான் ✻
கள்ளம்புகுநெஞ்சர்காணாவிறையுறைகாழியன்னா ✻
ளுள்ளம்புகுமொருகாற்பிரியாதுள்ளியுள்ளுந்தொறும் ✻
பள்ளம்புகும்புனல்போன்றகத்தேவரும்பான்மையளே. (௩௭௯)

மெல்லியற்பரத்தையை விரும்பிமேவினோன்
அல்லியங்கோதையை யகமகிழ்ந்துரைத்தது.

(இ-ள்.) தெள்ளிய நல்லபுனலையுடையகங்கைதங்குஞ் சடையையுடையவன், சிற்றம்பலத்தின்கண்ணுளன், பொய்நிறையுநெஞ்சத்தையுடையவர் ஒருஞான்றுங்காணாதவிறைவன், அவனுறைகின்ற காழியையொப்பாள் யான்றன்னைநினையாது வேறொன்றன் மேலுள்ளத்தைச்செலுத்தும்வழியும் தானென்னைநினைந்து ஒருகாலும்பிரியாது என்னுள்ளம்புகாநின்றாள், அவ்வாறன்றி யான்றன்னைநினையுந்தோறும் உயர்ந்தவிடத்தினின்றும் பள்ளத்திற்புகும்புனலையொத்துத் தடுப்பரியளாய் என்மனத்தின்கண்வருமுறைமையளாகாநின்றாள். அதனாற்பிரிந்துநீண்டிருத்தலரிதுபோலும். எ-று.

தெள்ளம் புனல்- மெல்லம்புலம்பு போல்வதோர் பண்புத்தொகை. மெய்ப்பாடு- மருட்கை. பயன் - பரத்தையினீங்கித்தலைமகளிடத்தணுதல். (௩௭௯)

## வாயில்பெறாதுமகன்றிறநினைதல்.

வாயில்பெறாதுமகன்றிறநினைதலென்பது - பரத்தையிற்பிரிந்து நினைவோடுவந்ததலைமகன் வாயிற்கணின்று, இத்தன்மையான் என்னைவந்தணைகின்றிலன், யான் இனிவண்டுறையுங் கொங்கையை எவ்வாறுநண்ணுவதென்று வாயில்பெறாது மகன்றிறநினையாநிற்றல். அதற்குச்செய்யுள்.

தேன்வண்டுறைதருகொன்றையன்சிற்றம்பலம்வழுத்தும் *
வான்வண்டுறைதருவாய்மையன்மன்னுகுதலையின்வா *
யான்வண்டுறைதருமாலமுதன்னவன்வந்தணையா *
னான்வண்டுறைதருகொங்கையெவ்வாறுகொனண்ணுவதே. (௩௫௮)

பொற்றொடிமாதர் நற்கடைகுறுகி
நீடியவாயிலின் வாடினன்மொழிந்தது.

(இ-ள்.) தேனும்வண்டுமுறையுங் கொன்றைப்பூவையணிந்தவனது சிற்றம்பலத்தைவழுத்தும் வானிடத்துளவாகிய வளவியவீடுகளை எனக்குத்தருமெய்ம்மையையுடையான், நிலைபெற்றகுதலையையுடைய இனியவாயையுடையான், வளவியகடல் தந்த பெருமையையுடைய அமிர்தத்தையொப்பான், அவன் என்னைவந்தணைகின்றிலன், நறுநாற்றத்தால் வண்டுகளுறையுங் கொங்கைகளையுடையாளை யான்பொருந்துவது இனியெவ்வாறோ! எ-று.

தேனென்றும்வண்டெனினுமமையும். வழுத்துவார்பெறும்வானென்பது வழுத்தும்வானென இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்துமேலேறிற்று. இப்பொழுது குதலையையுடைத்தாகிய வாயான் மேல்வளவிய நாற்றுறைகளைச்சொல்லி எனக்கின்பத்தைச்செய்யும் அமிழ்தன்னவனென்றுரைப்பினுமமையும். வாயிலின்-வாயிலால். மெய்ப்பாடு-அழுகை. பயன்-வாயில்கோடல். நெஞ்சொடுசொல்லியது.

## வாயிற்கணின்றுதோழிக்குரைத்தல்.

வாயிற்கணின்றுதோழிக்குரைத்தலென்பது-வாயில்பெறாதுமகன்றிறநினையாநின்றதலைமகன், நல்லநாட்டுப்பொலியுமகளிர்தங்கண்ணிணையான்வந்த அச்சத்தால்வந்த மயக்கத்தால்உண்டாகிய வாட்டத்தை நீக்காத இவ்விரதம் யாதாமென வாயில்வேண்டித் தோழிக்குக்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

கயல்வந்தகண்ணியர்கண்ணிணையான்மிகுகாதரத்தான் *
மயல்வந்தவாட்டமகற்றுவிரதமென்மாமதியி *

கயல்வந்தவாடரவாடவைத்தோனம்பலநிலவு *
புயல்வந்தமாமதிற்றில்லைநன்னாட்டுப்பொலிபவரே. (௩௮௪)

பெருந்தகைவாயில் பெறுதுநின்
றருந்தகைப்பாங்கிக் கறிவுறுத்தது.

(இ-ள்) ஏதங்குறித்துவந்த ஆடரவைப் பெருமையையுடைய பிறையின்பக்கத்து அதனைவருந்தாமற்செய்து ஆடவைத்தவனது அம்பலம் நிலைபெற்ற புயல்தங்கிய பெரியமதிலையுடைய தில்லையைச்சூழ்ந்த நல்லநாட்டிற்பொலியும் மகளிர், கயல்போலுங்கண்ணிணையுடையவர் கண்ணிணையால் ஒருகாலைக்கொருகால் மிகாநின்ற அச்சத்தால்வந்த மயக்கத்தாலுண்டாகிய வாட்டத்தை நீக்காத இவ்விரதம் யாதாம்! எ-று.

தில்லைநன்னாட்டுப்பொலிபவர் அகற்றுதவெனவினையும். பொலிபவர்க்கு என்னுநான்கனுருபு விகாரவகையாற்றொக்கதெனினுமமையும். இதுமுன்னிலைப்புறமொழி. இதனுள் கயல்வந்தகண்ணியென்றது தலைமகளை, தில்லைநன்னாட்டுப்பொலிபவரென்றது தோழியை. இனி மதிக்குவமை தலைமகளும் அரவிற்குவமை தலைமகனும் ஈசனுக்குவமை தோழியுமென்றாக்கி, அவ்வகைத்தாகிய பாம்பையும் மதியையும் தம்மிற்பகையறுத்து ஓரிடத்தேவிளங்க வைத்தாற்போல என்னுடன் அவட்குண்டாகிய வெறுப்பைத்தீர்த்து விளங்கவைத்தல் உனக்குங்கடனென்றானாயிற்றெனவுள்ளுறைகாண்க. மதியையரவேதங்குறித்துவந்தாற்போலத் தலைமகளைத் தலைமகனேதங்குறித்துவருதலாவது தலைமகளுக்கு ஊடல்புலவி துனியென்னும் வெறுப்புத்தோன்றுதற்குத் தக்ககாரணங்களைத்தலைமகன் உண்டாக்கிக்கொண்டுவருதல். அரவைக்கண்டு மதிக்கச்சந்தோன்றினாற்போலத் தலைமகனைக்கண்டு தலைமகளுக்கும் ஊடல் புலவி துனியென்னும் வெறுப்புத்தோன்றிற்று, ஆதலால் அத்தலைமகனையும் தலைமகளையும் மதிக்குமரவுக்குமொப்பச் சிலேடித்தசிலேடைக்கு மறுதலையாகாது, "தேவரனையர் கயவர்" என்றாற்போலவாமென்க. கயல்வந்தகண்ணியர்கண்ணிணையால் வந்த அச்சத்தால் வந்த மயக்கத்தால்வந்தவாட்டம் இவனுக்கு வருதற்குக்காரணம் தலைவி பராமுகஞ்செய்யும்படி தான்வருந்தல். இதனைத்தீர்த்தல் தில்லைநன்னாட்டுப் பொலியுமகளிர்க்குக் கடனென்றானென்க. அது "பிணிக்குமருந்து பிறமன் அணியிழை தன்னோய்க்குத்தானே மருந்து" என்றும், "துறைமெய்வலம் புரிதாய்த்து மணலுழுததோற்றமாய்வான் - பொறைமலிபூம்பு

ணைப் பூவுதிர் நண்டாது போர்க்குங்கான-னிறைமதி வாண்முகத்து நீள்கயற்கண் செய்த-வுறைமலியுய்யாநோயூர்சுணங்குமென் முலையே தீர்க்கும்போலும்.,, என்றும், சொல்லியவாறுபோலக் கண்ணாலுண்டாகிய நோய்க்குக் கண்ணே மருந்தாமென்று சொல்லியவாறாமெனக்கொள்க. மெய்ப்பாடும் பயனும்-அவை. தோழியைவாயில்கோடற்கிவ்வகைசொன்னானென்பது. (௩௮௧)

## வாயில்வேண்டத்தோழிகூறல்.

வாயில்வேண்டத்தோழிகூறலென்பது- வாயில்வேண்டியதலைமகனுக்கு, பண்டு நீர் வரும் வழியிடை வருமேதமும் இருளுமெண்ணாது கன்றையகன்ற கற்றாவையொத்து எம்மாட்டுவருதிர், இன்று எம்பொருந்தாதார்தெருவே அன்று எம்மாட்டூர்ந்துவந்த தேர்மேலேறிப்போகாநின்றீர், இதுவன்றோ எம்மாட்டு நுமதருளெனத் தோழி அவன்செப்பிக்கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

கூற்றாயினசினவாளியெண்ணீர்கண்கள்கோளிழித்தாற் *
போற்றான்செறியிருட்பொக்கமெண்ணீர்கன்றகன்றபுனிற் *
றீற்றாவெனநீர்வருவதுபண்டின்றெம்மீசர்தில்லைத் *
தேற்றார்கொடிநெடுவீதியிற்போதிரத்தேர்மிசையே. (௩௮௨)

வைவேலண்ணல் வாயில்வேண்டப்
பையரவல்குற் பாங்கிபகர்ந்தது.

(இ-ள்.) கூற்றம்போலக் கொடியவாகிய சினத்தையுடைய யாளிகளை ஊறுசெய்வனவாகக் கருதாது கண்களைக்கோளிழித்தாற்போலச் செறிந்தவிருளின் மிகுதியைத்தான் இடையூறாகநினையாது கன்றையகன்ற ஈன்றணிமையையுடைய கற்றாவையொத்துப்பண்டுநீர் எம்மாட்டுவருவது, இன்று எம்முடையவீசரது தில்லையிலே எமதுபொருந்தாதாரது கொடியையுடைய நெடியவீதியில் எம்மாட்டூர்ந்துவந்த தேர்மேலேறிப் போதாநின்றீர், இதுவன்றோ எம்மாட்டு நும்மருளாயினவாறு. எ-று.

ஆளியெண்ணீர் பொக்கமெண்ணீர் என்பனவற்றை முற்றாகவுரைப்பினுமமையும். கண்களுக்குக் கோளென்றது பார்வை. இதனையிழித்தலென்பது கண்மணியைவாங்குதல். தாமென்பது அதுவன்றி இதுவொன்றென்பதுபட நின்றதோரிடைச்சொல். அசைநிலையெனினுமமையும். ஈற்றாவென்றது கடுஞ்சூல் நாகன்றிப்பலகாலீன்றஆவை. மெய்ப்பாடு- வெகுளி. பயன்-வாயின்மறுத்தல். (௩௮௨)

## தோழிவாயில்வேண்டல்.

தோழிவாயில்வேண்டலென்பது-தலைமகளுக்கு அவன்செய்தது கூறிச்சென்று, அன்று நம்புனத்தின்கண்ணேவந்து யானைகடிந்தவிருந்தினர் தாந் தம்பெருமையைநினையாது இன்று நம்வாயிற்கண்வந்து, வேட்கைப்பெருக்கந்தம்மிடத்துச்சிறப்பநின்று ஒன்றும்வாய்திறக்கின்றிலர், இதற்கியாஞ்செய்யுமாறென்னோவெனத் தலைமகளைத் தோழி வாயில்வேண்டாநிற்றல். அதற்குச்செய்யுள்.

வியந்தலைநீர்வையமெய்யேயிறைஞ்சவின்றோய்குடைக்கீழ் *
வயந்தலைகூர்ந்தொன்றும்வாய்திறவார்வந்தவாளரக்கன் *
புயந்தலைதீரப்புலியூரானிருக்கும்பொருப்பிற் *
கயந்தலையானைகடிந்தவிருந்தினர்கார்மயிலே. (௩௮௫)

வாயில்பெறாது மன்னவனிற்ப
ஆயிழையவட்குத் தோழிசொல்லியது.

(இ-ள்.) கார்காலத்துமயிலையொப்பாய், வரையையெடுக்கவந்த வாளினையுடைய அரக்கனது கையுந் தலையும் உடலினீங்கப்புலியூரான் வாளாவிருக்குங் கைலைப்பொருப்பின்கண் மெல்லியதலையையுடைய யானையை நம்மேல்வாராமல் அன்றுமாற்றிய நம்விருந்தினர், தமதுவிண்ணைத்தோயாநின்ற குடைக்கீழ்க் கடலாற் சூழப்பட்டவுலகத்துள்ளாரெல்லாரும் வியந்துசென்று அகனமர்ந்திறைஞ்சத் தாந்தமதுபெருமைநினையாது நங்கடைவந்துநின்று வேட்கைப்பெருக்கந் தம்மிடத்துச்சிறப்ப ஒன்றுஞ் சொல்லுகின்றிலர், இனி மறுத்தலரிது. எ-று.

விண்டோய்குடைக்கீழிறைஞ்சவெனவியையும். வயா- வயமெனநின்றது. இருந்ததுணையல்லது ஒருமுயற்சிதோன்றாமையின், இருக்குமென்றார். சிற்றிலிழைத்துவிளையாடும்வழி விருந்தாய்ச்சென்றுநின்றானாகலின், விருந்தினரென்றாள். இற்செறிக்கப்பட்டவிடத்து ஊண்காலத்துவிருந்தாய்ச்சென்றானாகலின் விருந்தினரென்றாளெனினுமமையும், "புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்-பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்." என்பது இலக்கணமாதலின். கார்ப்புனத்தேயென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு-இளிவரல். பயன்-தலைமகளைச்சிவப்பாற்றுவித்தல். (௩௮௫)

## மனையவர்மகிழ்தல்.

மனையவர்மகிழ்தலென்பது- தோழி வாயில்வேண்டத் தலைமக

ள் துனித்தநோக்கங்கண்டு, ஓகைகொண்டு செல்லவேண்டிக் காதலன்வந்தானென்று சொல்லுமளவில் இவளுடையகாவியங்கண்கள் கழுநீர்ச்செவ்வியைவெளவுதல்கற்றனவென மனையவர் தம்முண்மகிழ்ந்துகூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

தேவியங்கண்டிகழ்மேனியன்சிற்றம்பலத்தெழுது *
மோவியங்கண்டன்னவொண்ணுதலாடனக்கோகையுய்ப்பான் *
மேவியங்கண்டனையோவந்தனனெனவெய்துயிர்த்துக் *
காவியங்கண்கழுநீர்ச்செவ்விவெளவுதல்கற்றனவே. (௫௮௪)

கன்னிமானோக்கி கனன்றுநோக் கு
மன்னியமனையவர் மகிழ்ந்துரைத்த து.

(இ-ள்.) தேவியவ்விடத்துவிளங்குமேனியையுடையவனது சிற்றம்பலத்தின்கண் எழுதப்பட்ட ஓவியத்தைக்கண்டாற்போலும் ஒண்ணுதலையுடையாள் தனக்கு ஓகைகொண்டுசெல்லவேண்டிக் காதலன்வந்தான் வந்துபொருந்துகின்ற இயவொலிகேட்டனையோவென்று கண்டார் வந்துசொல்லக்கேட்டு, வெய்தாகவுயிர்த்துக் குவளைப்பூப்போலுங்கண்கள் கழுநீர்யலர்ச்செவ்வியை வெளவுதல்வல்லவாயின, இனியென்னிகழும்! எ-று.

அங்கட்டிகழ்மேனியென்பது மெலிந்துநின்றது. தேவியுடையவழகியகண்மலர்கள் சென்றுவிளங்குமேனியையுடையவனெனினுமமையும். மேவியங்கண்டனையோவந்தனனெனவென்பதற்கு, அழகியகண்டன்வந்தானென்று மேவியுரைப்பவெனினுமமையும். ஐயோவென்றது உவகைக்கண்வந்தது. வெய்துயிர்த்தற்குவினைமுதல் உயிர்த்தற்குக்கருவியாகியபொறியெனினுமமையும். மெய்ப்பாடு-அழுகை. பயன்- தலைமகள் வாயினேராமையுணர்த்துதல்.
(௫௮௪)

## வாயின்மறுத்துரைத்தல்.

வாயின்மறுத்துரைத்தலென்பது-மனையவர் துனிகண்டுமகிழாநிற்ப, இவனை நமக்குத்தந்தபின்னர் நம்முடையவாயத்தார்முன்னே நங்காதலர் இன்றுநங்கடையைக்கண்டார், இதுவன்றே நம்மாட்டு அவாருளெனத் தோழிக்குத் தலைமகள் வாயின்மறுத்துக்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

உடைமணிகட்டிச்சிறுதேருருட்டியுலாத்தருமிந் *
நடைமணியைத்தந்தபின்னர்முன்னான்முகன்மாலறியா *
விடைமணிகண்டர்வண்டில்லைமென்றோகையன்னார்கண்முன்னங் *
கடைமணிவாணகையாயின்றுகண்டனர்காதலரே. (௫௮௫)

மடவரற்றோழி வாயில்வேண் ட
அடல்வேலவ னருளுரைத்த து.

(இ-ள்.) முத்துப்போலுமொளியையுடைய நகையையுடையாய், உடைமணியையரையிற்கட்டிச் சிறுதேரையுருட்டி உலாவும் இவ்வியங்குதலையுடைய இந்தமணியை நமக்குத்தந்தபின், முற்காலத்து நான்முகனுமாலுந்தேடியுமறியாத விடையையுடையமணிகண்டரது வளவியதில்லையின் மெல்லியமயிலையொப்பார்கண்முன்னே நங்கடையைக் காதலர் இன்றுகண்டார், இதுவன்றோ நம்மாட்டு அவரருள். எ-று.

கட்டியென்பது ஈண்டுத் தங்கியென்னும்பொருட்டாய்நின்றது. நடைமணியென்றது புதல்வனை. விடமணிகண்டனென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு-வெகுளி. பயன்-வாயின்மறுத்தல். (௫௮௫)

## பாணனொடுவெகுளுதல்.

பாணனொடுவெகுளுதலென்பது, தோழிக்குவாயின்மறுத்த தலைமகள், நின்னிடத்து அவர்நீங்காதவருள்பெரியரென்று நீசொல்லவேண்டுமோ, அதுகிடக்க, கொற்சேரியிலூசிவிற்றப் புலையானம்மில்லத்து நின்னுடைய நல்லநல்ல பொய்யைப்பொருந்தி நிற்கலுற்றோ நீபோந்ததென வாயில்வேண்டியபாணனொடு வெகுண்டுகூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.

மைகொண்டகண்டர்வயல்கொண்டதில்லைமல்கூரர்நின்வாய் *
மெய்கொண்டவன்பினரென்பதென்விள்ளாவருள்பெரியர் *
வைகொண்டவூசிகொற்சேரியின்விற்றெம்மில்வண்ணவண்ணப் *
பொய்கொண்டுநிற்கலுற்றோபுலையாத்திநின்போந்ததுவே. ( )

மன்னியாழ்ப்பாணன் வாயில்வேண் ட
மின்னிடைமடந்தை வெகுண்டுரைத்த து.

(இ-ள்.) கருமையைப்பொருந்தியகண்டத்தையுடையவரது வயலைப்பொருந்திய தில்லைக்கண்ணுள்ளாராகிய வளமல்கியவூரையுடையவர் நின்கண்மெய்ம்மையைப்பொருந்திய வன்பையுடையரென்று நீசொல்லவேண்டுமோ! அவர் எம்மிடத்துநீங்காதவருள்பெரியரன்றோ, அதுகிடக்க, கூர்மையைப்பொருந்திய ஊசியைக்கொற்சேரியின்கண்விற்று எம்மில்லத்து நின்னுடையநல்லநல்லபொய்ம்மையைப்பொருந்திநிற்கலுற்றோ, புலையனாகிய ஆத்தின்னி, ஈண்டுநீ போந்தது! இது சாலநன்று! எ-று.

மெய்கொண்டவன்பினைொன்று சொல்லுகின்றதென் நின்வாயிலவர் விள்ளாவருள்பெரியரன்றேயென்றுரைப்பினுமமையும். ஊசிகொற்சேரியின்விற்றென உவமவினை உவமிக்கப்படும்பொருண்மேலேறிநின்றது. அடுக்கு- பன்மைக்கண்வந்தது. ஆத்தின்வியென்பதனை முன்னிலைக்கண்வந்ததாகவுரைப்பினுமமையும். விற்குநின்னென்பதூஉம் பாடம். மெய்ப்பாடும்பயனும்-அவை. ()

## பாணன்புலந்துரைத்தல்.

பாணன்புலந்துரைத்தலென்பது- தலைமகள்வெகுண்டுரையாநிற்ப, நின்புருவநெரிய வாய்துடிப்ப என்னையெறிதற்குக் கல்லெடுக்கவேண்டா, நினதுகரியகண்களின் சிவப்பாற்றுவாயாக, நீவெகுளப்படுவதன்று, நினக்குப் பல்லாண்டுசெல்வதாக, யான்வேண்டியவிடத்துப்போக நின்னடியைவலங்கொள்ளாநின்றேனென வாயில்பெறாமையிற் பாணன் புலந்துகூறாநிற்றல். அதற்குச் செய்யுள்.

கொல்லாண்டிலங்குமழுப்படையோன்குளிர்தில்லையன்னாய் *
வில்லாண்டிலங்குபுருவநெரியச்செவ்வாய்துடிப்பக் *
கல்லாண்டெடேல்கருங்கண்சிவப்பாற்றுகறுப்பதன்று *
பல்லாண்டடியேனடிவலங்கொள்வன்பணிமொழியே. (௩௮௭)

கருமலர்க்கண்ணி கனன்றுகட்டுரைப்பப்
புரியாழ்ப்பாணன் புறப்பட்டது.

(இ-ள்.) கொற்றொழில் அவ்விடத்துவிளங்கும் மழுவாகியபடையையுடையவனது குளிர்ந்ததில்லையையொப்பாய், வில்லையடிமைக்கொண்டுவிளங்காநின்ற புருவநெரியச் செவ்வாய்துடிப்ப எறிதற்குக்கல்லை அவ்விடத்தெடுக்கவேண்டா, கரியகண்களைச்சிவப்பாற்றுவாயாக, வெகுளப்படுவதன்று, நினக்குப் பல்லாண்டுகள் உளவாகவேண்டும், பணிமொழியையுடையாய், யான்வேண்டிய தேயத்துக்குப்போக அடியேன் நின்னடியை வலங்கொள்ளாநின்றேன். எ-று.

கருங்கண்ணினது சிவப்பெனினுமமையும். பல்லாண்டென்றது-தலைமகனுடனுண்டாகியவெறுப்புத்தீர்ந்து கூடியிருமென்று சொல்லியது நமக்குத்தவறாயிற்றாயின் பல்லாண்டும் இப்படியிருப்பீரொன்றான். இப்படியிருப்பீரென்றது-பல்லாண்டுமிப்படித்தனித்திருப்பீரென்று வளமாகத் தன்பாணவார்த்தைசொல்லியவாறென்றறிக. புருவநெறிக்கவென்பதூஉம் வெவ்வாயென்பு

தூஉம் பாடம். புரி-நரம்பு. மெய்ப்பாடு-அச்சம். பயன்-சிவப்பாற்றுவித்தல். (௩௮௭)

## விருந்தொடுசெல்லத் தணிந்தமைகூறல்.

விருந்தொடுசெல்லத் தணிந்தமைகூறலென்பது-வாயில்பெறாது பாணன் புலந்துநீங்காநிற்ப, யாவர்க்கும் வாயினேராது வெகுண்டுரைத்தலாற் றழல்வேல்போலமிளிர்ந்து முத்தம்பயக்குமிவளுடையகண்கள் விருந்தொடுவந்தானென்று சொல்லுமளவிற் பண்டைநிறமாகிய கருங்குவளையது செவ்விபரந்த, என்னைமனையறக்கிழத்தியோவென இல்லோர் தம்முட்கூறுநிற்றல். அதற்குச் செய்யுள்.

மத்தக்கரியுரியோன்றில்லையூரன்வரவெனலுந் *
தத்தைக்கிளவிமுகத்தாமரைத்தழல்வேன்மிளிர்ந்து *
முத்தம்பயக்குங்கழுநீர்விருந்தொடென்றுதமுன்னமிங் *
கித்தக்கருங்குவளைச்செவ்வியோடிக்கெழுமினவே. (௩௮௮)

பல்வளை பரிசுக ண்
டில்லோ ரியம்பிய து.

(இ-ள்.) களிப்பையுடைத்தாகிய யானையின்றோலையுடையவனது தில்லையூரனது வரவென்று சொல்லத்தொடங்குதலும் கிளியின் மொழிபோலும் மொழியையுடையாளது முகமாகியதாமரைக்கண்ணே தழலையுடையவேல்போலப்பிறழ்ந்து நீர்த்துளியாகியமுத்தத்தையுண்டாக்காநின்ற கண்ணாகியசெங்கழுநீர்மலர், விருந்தோடென்று சொல்லுவதற்குமுன், விரையப்பண்டைநிறமாகியகரியகுவளைச்செவ்விபரந்துமேவின, என்னைமனையறக்கிழத்தியோ. எ-று.

மத்தம்-மதமென்பாருமுளர். ஊரன்வரவென வினையெச்சமாகப்பிரிப்பினுமமையும். இத்தமென்பதனைச் செய்யப்பட்டதென்னும்பொருளதோர் வடமொழித்திரிபென்பாருமுளர். விருந்து வாயிலாகப் புக்கவழி இல்லோர் சொல்லியது. மெய்ப்பாடு- உவகை. பயன்-மெய்ம்மகிழ்தல். (௩௮௯)

## ஊடறணிவித்தல்.

ஊடறணிவித்தலென்பது-விருந்தேற்றுக்கொண்டு தலைமகளுழைச்சென்று, நம்முடையதோன்றலைத் தனக்குத் துணையாகக்கொண்டுவந்து தோன்றுதலான் றினதுளத்துக்கவற்சியையொழிந்து இனிநம்மரசற்குக் குற்றேவல்செய்வாயாகவெனத் தோழி அவளையூடறணிவியாநிற்றல். அதற்குச்செய்யுள்.

கவலங்கொள்பேய்த்தொகைபாய்தரக்காட்டிடையாட்டுவந்த *
துவலங்கிலாச்சிவன்றில்லையன்னாய்தழுவிம்முழுவிச் *
சுவலங்கிருந்தநந்தோன்றற்றுணையெனத்தோன்றுதலா *
லவலங்களைந்துபணிசெயற்பாலையரசனுக்கே. (௩௮௧)

தோன்றலைத் துணையொடு தோழிகண் டு
வான்றகைமடந்தையை வருத்தந்தணித்த து.

(இ-ள்.) கவற்சிகொள்ளுதற்கேதுவாகியபேய்த்திரள் கரணங் களைப்பாயாநிற்பப்புறங்காட்டின்கண் ஆடுதலைவிரும்பிய கேடங் கில்லாதசிவனது தில்லையையொப்பாய், தழுவிமுத்தங்கொண்டு சு வலிடத்தேறியிருந்த நம்முடையதோன்றலைத் தமக்குத்துணையெ னக்கருதி வந்து தோன்றுதலான், நினதுள்ளத்துக் கவற்சியைநீக் கி இனியரசற்குக் குற்றேவல்செயற்பாலை. எ-று.

தழுவிமுழுவித்தோன்றுதலாலெனவிளையும். சுவற்கணங்கிரு ந்தவெனினுமமையும். மெய்ப்பாடு- பெருமிதம். பயன் - தலைமக ளைச்சிவப்பாற்றுவித்தல். (௩௮௧)

## அணைந்தவழியூடல்.

அணைந்தவழியூடலென்பது- தோழியாலூடல்தணிவிக்கப்பட் டுப் பள்ளியிடத்தாளாகியதலைமகள், நீசெய்கின்றவிதனையறியின் நின்காதலிமார் நின்னைவெகுள்வர், அதுகிடக்க, யாம் மேனிமுழு துஞ்சிறுவனாலுண்டாக்கப்பட்ட பால்புலப்படுந்தன்மையையு டையேம், அதன்மேல் யாமும் நீசெய்கின்றவிக்கள்ளத்தைவிரும் பேம், அதனால் எங்காலைத்தொடாதொழி, எங்கையைவிடுவாயாக வெ னத் தலைமகன்றன்னையணைந்தவழி ஊடாநிற்றல். அதற்குச்செ ய்யுள்.

சேலுந்திகழ்வயற்சிற்றம்பலவர்தில்லைநகர்வாய் *
வேலுந்திகழ்கண்ணியிளையார்வெகுள்வர்மெய்ப்பாலன்செய்த *
பாலுந்திகழும்பரிசினமேவும்படிறுவவேங் *
காலுந்தொடேறொடேல்விடுதீண்டலெங்கைத்தலமே. (௩௮௨)

தெளிபுனலூரன் சென்றணைந்தவ ழி
ஒளிமதிநுதலி யூடியுரைத்த து.

(இ-ள்.) சேல்விளங்கும் வயலையுடையசிற்றம்பலவரது தில்லை நகரிடத்துளராகிய வேல்போலுங்கண்ணையுடைய நின்காதலிமா ராகியவிளையவர் நீசெய்கின்றவிதனையறியின் நின்னைவெகுள்வர், அதுவேயுமன்றி, மேனி சிறுவனாலுண்டாக்கப்பட்ட பால்புல

ப்படுந்தன்மையையுடையேமாதலின் நினக்குத் தகேம், இனன் மேலே யாமும் நீயும் மேவுநாணின்மையோடுகூடிய கள்ளத்தை விரும்பேம், அதனுல் எங்காலைத்தொடாதொழி, எம்மைத்தொடரவேண்டா, எங்கைத்தலத்தைத்தீண்டற்பாலையல்லை, விடுவாயாக. எ-று.

திகழ்வயற்றில்லையெனவியையும். பால் திகழுமென்னும் இடத்து திகழ்பொருளின்வினை மெய்யாகியவிடத்து மேலேறிநின்றது.நான்கிடத்தும் தாமென்பது அசைநிலை. பரிசினமேனுமென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு-வெகுளி.பயன்-ஊடனீங்குதல்.()

## புனலாட்டுவித்தமைகூறிப்புலத்தல்.

புனலாட்டுவித்தமைகூறிப்புலத்தலென்பது - அணைந்தவழியூடாநின்றதலைமகள் ஊடறீராநின்ற தலைமகனோடு, இவர்செய்தபிழையெல்லாம் பொறுக்கலாம், பலருமறியவொருத்தியைப்புனலாட்டுவித்து அதுசெய்யாதார்போல என்மனையின்கணிவர்வந்துநிற்கின்றவிது எனக்குப்பொறுத்தலரிதெனத் தணிக்கத் தணியாதுபரத்தையைப் புனலாட்டுவித்தமைகூறிப் புலவாநிற்றல். அதற்குச்செய்யுள்.

செந்தார்நறுங்கொன்றைச்சிற்றம்பலவர்தில்லைநகரோர் *
பந்தார்விரலியைப்பாய்புனலாட்டிமன்பாவிபெற்கு *
வந்தார்பரிசுமன்றுப்நிற்குமாறென்வளமனையிற் *
கொந்தார்தடந்தோள்விடங்காலயிற்படைக்கொற்றவரே. (ருகக)

ஆங்கதனுக் கழுக்கமெய் தி
வீங்குமென்முலை விட்டுரைத்த தூ.

(இ-ள்.) கொத்துமாலைநிறைந்த பெரியதோளினையும் நஞ்சைக்காலுங்கூரியபடையினையுமுடைய கொற்றவர் தீவினையேற்கு எனது வளமனையில்வந்து நிற்கின்றபடி, பந்துபயின்றவிரலாளொருத்தியைப் பாய்ந்தபுனலையாட்டுவித்து வெளிப்படத்தவறுசெய்து வந்தார் சிலர் நிற்கும்பரிசுமன்றுப் மனத்தவறுசெய்யாதார் வந்துநிற்குமாறு வந்து நின்றாராயின், அதுபொறுத்தலரிது. எ-று. செய்ய தாராகிய நறியகொன்றைப்பூவினையுடையசிற்றம்பலவரது தில்லையாகியநகர்வயாப்பிற் பாயும் புனலையாட்டியெனக்கூட்டுக.

தில்லைநகரோர்பந்தார்விரலியெனவியைப்பினுமமையும். மின்-ஒழிபிசைக்கண்வந்தது, அசைநிலையெனினுமமையும். ஒருத்தியைப்புனலாட்டிவந்தார்பரிசுமன்றுய்க்கொற்றவர் மணக்கண்வந்துநிற்குமாறென்னென்று கூட்டியுரைப்பினுமமையும். சொத்துமாலை-பலவாயொன்றாகியமாலை. ஆங்கதனுக்கு- அப்படித்துநிலையால். விட்டுரைத்தது-வெளிப்படவுரைத்தது. மெய்ப்பாடும் பயனும்-அவை. (௩௯௧)

## கலவிகருதிப்புலத்தல்.

கலவிகருதிப்புலத்தலென்பது-புனலாட்டுவித்தமைகூறிப் புலவாநின்றதலைமகள், ஊடறீர்க்க நுதலுந்தோளுமுதலாயினவற்றைத் தைவந்துவருடித் தலையளிசெய்யாநின்றதலைமகனோடு,எம்முடைய சிறியவில்லின்கண்வந்து அன்று நீயிர்செய்ததலையளி எங்கட்கு அன்றுவேண்டுதுமாயினும் இன்று உமதுதிருவருள் எங்கட்கு நீயிர்வந்த இத்துணையுமமையும் வேறு நீயிர் தலையளி செய்யவேண்டுவதில்லையெனக் கலவிகருதிப் புலவாநிற்றல். அதற்குச்செய்யுள்.

மின்றுன்னியசெஞ்சடைவெண்மதியன்விதியுடையோர் *
சென்றுன்னியகழற்சிற்றம்பலவன்றென்னம்பொதியி *
னன்றுஞ்சிறியவரில்லெமதில்லநல்லூரமன்னே *
யின்றுன்றிருவருளித்துணைசாலுமன்னெங்களுக்கே. (௩௯௨)

கலைவளரல்குறலை மகன்றன்னொடு
கலவிகருதிப் புலவிபுகன்றது.

(இ-ள்.) மின்னையொத்தசெஞ்சடைக்கண்வைத்த வெண்பிறையையுடையான், நற்பாலையுடையோர் சிற்றின்பத்திற்குக்காரணமானபுலன்களைவிட்டுச்சென்று நினைந்தகழலையுடைய சிற்றம்பலவன், அவனது தெற்கின்கணுண்டாகியபொதியிலிடத்து எமது குடி பெரிதுஞ்சிறியவரது குடி, அதனுள், நல்லூரையுடையாய், முற்காலத்து நின்றலையளிவேண்டுதுமாயினும், இப்பொழுது உனதுதிருவருள் எங்கட்குநீவந்தவித்துணையுமமையும், நீ தலையளி செய்யவேண்டுவதுண்டோ. எ-று.

மன்னும் ஓவும் அசைநிலை. சாலுமன்னென்புழி மன்னும் அசைநிலைபோலும். மெய்ப்பாடு-வெகுளி. பயன்-புலத்தல், புலவிநீங்கியதூஉமாம். (௩௯௨)

## மிகுத்துரைத்தூடல்.

மிகுத்துரைத்தூடலென்பது-கலவிகருதிப்புலவாநின்றதலைமகள், புணர்தலுறுநின்ற தலைமகனுடன் நீர் விழுமியநாட்டு விழுமியநல்லூர் விழுமியகுடியிலுள்ளீர், எம்போல்வாரிடத்து இவ்வாறுபுணர்தல் விரும்புதல்தமக்குவிழுமியவல்லவெனமிகுத்துரைத்தூடாநிற்றல். அதற்குச்செய்யுள்.

செழுமியமாளிகைச்சிற்றம்பலவர்சென்றன்பர்சிந்தைக் *
கழுமியகூத்தர்கடிபொழிலேழினும்வாழிபரோ *
விழுமியநாட்டுவிழுமியநல்லூர்விழுக்குடியீர் *
விழுமியவல்லகொல்லோவின்னவாறுவிரும்புவதே. (௩௯௫)

நாடுமூரு மில்லுஞ்சுட் டி
ஆடற்பூங்கொடி யூடியுரைத்த து.

(இ-ள்.) வளவியமாளிகைகளாற்சூழப்பட்டசிற்றம்பலத்தையுடையார், அன்பர்சிந்தைக்கட்சென்றுபொருந்தியகூத்தர், அவரது காவலையுடையவுலகமேழினுள்ளுஞ் சிறந்தநாட்டின்கட் சிறந்தநல்லவூரிற் சிறந்தகுடியிலுள்ளீர், எம்போல்வாரிடத்து இந்தன்மையவாகிய நெறியைவிரும்புதல் உமக்குச்சிறந்தனவல்லபோலும். எ-று.

வாழியும் அரோவும் அசைநிலை. விரும்புவதென்புழி, இன்னவாறுவிரும்புவபோல்வனவென்பது கருத்தாகலின், ஒருமைப்பன்மைமயக்கம் அமையுமாறுமுடைத்து. இன்னவாறென்பதற்கு இன்னவண்ணம்விரும்புதலெனினுமமையும். விரும்புதலென்பதூஉம் பாடம். ஆடல்-நடக்கம். மெய்ப்பாடும் பயனும்-அவை.

## ஊடனீடவாடியுரைத்தல்.

ஊடனீடவாடியுரைத்தலென்பது- தணிக்கத்தணியாது மிகுத்துரைத்துத் தலைமகள் மேன்மேலுமூடாநிற்ப, அன்று அம்பலையிடத்துத் தன்னையெய்துதற்கோருபாயமின்றிவருந்தாநிற்ப யானுய்யும்வண்ணந் தன்னிணை மலர்க்கண்ணினது இனியநோக்கத்தைத்தந்தருளி என்னைத்தன்வயமாக்கிய நம்பெண்ணமுதம் அதுவன்று, இது நம்மைவருத்துவதோர்மாயமாமெனத் தன்னெஞ்சிற்குச்சொல்லி ஊடனீடத் தலைமகன் வாடாநிற்றல். அதற்குச்செய்யுள்.

திருந்தேனுயநின்றசிற்றம்பலவர்தென்னம்பொதியி *
லிருந்தேனுயவந்திணைமலர்க்கண்ணினின்னோக்கருளிப் *

பெருந்தேனெனநெஞ் சுகப்பிடித்தாண்டநம் பெண்ணமிழ்தம்
வருந்தேலதுவன்றிதுவோவருவதொர்வஞ்சனையே. (௩௬௪)

வாடா வூ ட
னீடா வாடிய து.

(இ-ள்.) ஒருவாற்றானுந்திருந்தாத யான் பிறவித்துன்பத்திற் பிழைக்கவந்துநின்றசிற்றம்பலவரதுதெற்கின்கணுளதாகியபொதியிலிடத்து ஒருமுயற்சியுமின்றியிருந்த யானுய்யும்வண்ணம் வந்து, தன்னுடைய இணைந்தமலர்போலுங்கண்களினது உள்ளக்கருத்தைவெளிப்படுத்தும் நாணோடுகூடியநோக்கமாகிய இனிய கடைக்கணோக்கத்தை முன்னெனக்குத்தந்து, பெருந்தேன்போலவினிதாய்,என்னெஞ்சமுருக,என்னைப்பிடித்துத் தன்வயமாக்கிய நமது பெண்வடிவையுடைய அமிழ்தமாகிய அது இதுவன்று, இதுவோ வருவதொருமாயம்,அதனான் நீவருந்தாதொழி. எ-று.

ஓகாரம்-ஒழியிசைக்கண்வந்தது. தன்னைநோக்கியொருமுயற்சியுமில்லாதயான் பிறவித்துன்பத்திற்பிழைக்கத் தானேவந்து தன்னிணைமலர்க்கண்ணினதினியகடைக்கணோக்கத்தைத்தந்து பெருந்தேன்போனினிதாய், என் வன்மனநெகிழ என்னைவலிந்து பிடித்தடிமைக்கொண்டபெண்ணமிழ்தமென வேறுமொரு பொருள்விளங்கியவாறுகண்டுகொள்க. மெய்ப்பாடு-அழுகை. பயன்-தலைமகளைசசிவப்பாற்றுவித்தல். (௩௬௪)

## துனியொழிந்துரைத்தல்.

துனியொழிந்துரைத்தலென்பது- ஊடனீடலால் தலைமகனைத்தாற்றுவாயில்கண்டதலைமகள்,அன்று நங்குன்றிடத்து மிக்கவிருளின்கண்ணே அரிதிரண்டு யானைவேட்டஞ்செய்யும் அதரகத்துத் தமதுவேலே துணையாகவந்து இயல்லைப்பொருந்தியவன்மை நமக்குத்தந்தவர்க்கு இன்றுநாமுடம்படாது நிற்குமிந்நிலைமை என்றுமெனத் துனியொழிந்து அவனோடு புணர்ச்சிக்குடம்படாநிற்றல். அதற்குச்செய்யுள்.

இயன்மன்னுமன்புதந்தார்க்கென்னிலையிமையோரிறைஞ்சுஞ் *
செயன்மன்னுஞ்சீர்க்கழற்சிற்றம்பலவர்தென்னம்பொதியிற் *
புயன்மன்னுகுன்றிற்பொருவேலுணையாப் பொம்மென்னிருள்வாய்,யயன்மன்னும்யானை துரந்தரிதேருமதரகத்தே. (௩௬௫)

தகுதியினான் மிகுபதநோக்கி ப்
பனிமலர்க்கோதை துனியொழிந்த து.

(இ-ள்) இமையோரிறைஞ்சும் நுண்செயல்தங்கிய நல்லவீரக்கழலணிந்த திருவடியையுடைய சிற்றம்பலவரது தெற்கின்கணுளதாகியபொதியிலிடத்துப் புயறங்கிய இக்குன்றிற்செறிந்த விருளின்கண்ணே, பக்கத்துத்தங்கும்யானைகளையோட்டி, அரிமா அவைபுக்கவிடந்தேடும் வழியகத்துத் தமதுபொருவேலே துணையாகவந்து, இயல்பாகியநிலைபெற்றவன்மை நமக்குத்தந்தவர்க்கு, யானிவ்வாறுடம்படாதுநிற்குநிலை என்னும்! இது தகாது. எ-று.

பெயரெச்சத்திற்கும் பெயர்க்கும் ஒருசொன்னீர்மைப்பாடுண்மையின், இயன்மன்னுமன்பெனத் தொக்கவாறறிக. இயல்பைப்பொருந்தியவன்பெனினுமமையும். அதரகத்துவந்தெனவொருசொல்வருவித்துரைக்கப்பட்டது. புயன்மன்னுகுன்றிலன்புதந்தார்க்கெனக்கூட்டுக. தகுதியின்-தகுதியான். மிகுபதம்-ஆற்றாமைமிக்கவளவு. தகுதியிலூரனெனப்பாடமாயின், தகுதியில்லாதமிகுபதமென்க. மெய்ப்பாடு-அச்சம். பயன்-சிவப்பாற்றுதல்.

## புதல்வன்மேல்வைத்துப்புலவிதீர்தல்.

புதல்வன்மேல்வைத்துப்புலவிதீர்தலென்பது- துனியொழித்துக்கூடிப் பிரிந்தவழிப் பின்னும்பரத்தைமாட்டுப்பிரிந்தானென்றுகேட்டுப் புலந்து வாயின்மறுக்க, வாயிற்கணின்று விளையாட்டுநின்ற புதல்வனையெடுத்தணைத்துத் தம்பலமிட்டு முத்தங்கொடுத்து அதுவாயிலாகக்கொண்டு தலைமகன்செல்லாநிற்ப, அப்புதல்வனைவாங்கியணைத்துக்கொண்டு, அவன்வாயிற்றம்பலந் தன்மெய்யிற்படுதலான் எல்லார்க்கும்பொதுவாகிய தம்பலத்தைக்கொண்டுவந்தோ நீயெம்மைக்கொண்டாடுவது, அதுகிடக்க, இதனைநினக்குத்தந்தவாறுசொல்லுவாயாகவெனப் புதல்வன்மேல்வைத்துத் தலைமகள் புலவிதீராநிற்றல். அதற்குச்செய்யுள்.

கதிர்த்தநகைமன்னுஞ்சிற்றவ்வைமார்களைக்கண்பிழைப்பித் *
தெதிர்த்தெங்குநின்றெப்பரிசளித்தானிமையோரிறைஞ்சு *
மதுத்தங்கியகொன்றைவார்சடையீசர்வண்டில்லைநல்லார் *
பொதுத்தம்பலங்கொணர்ந்தோபுதல்வாவெம்மைப்பூசிப்பதே.

புதல்வனது திறம்புகன்று
மதாரிக்கண்ணி வாட்டந்தவிர்ந்தது.

(இ-ள்.) தேன்றங்கியகொன்றைப்பூவையுடைய நீண்டசடை

யையுடையவீசனது இமையோரால்வணங்கப்படும் வளவியதில் லையிலுளராகிய நல்லோரெல்லார்க்கும் பொதுவாகியதம்பலத் தைக் கொண்டுவந்தோ, புதல்வா, நீயெம்மைக்கொண்டாடுவது? அதுநிற்க, இது நினக்குத்தருகின்றவிடத்து நின்றந்தை, ஒளிவிட் ட முறுவல்பொருந்திய நின்சிறியவன்னைமாராக் கண்ணைத்தப்பு வித்து அவர்காணுதவண்ணம் ஒருவாற்றானின்னையெதிர்ப்பட்டு, அவ்விடத்துநின்று, எவ்வண்ணமிதனை நினக்குத்தந்தான்? நீயிது சொல்லவேண்டும். எ-று.

மெய்ப்பாடு-இளிவரலைச்சார்ந்தநகை. பயன்-ஊட னீங்குதல்.

## கலவியிடத்தூடல்.

கலவியிடத்தூடலென்பது- புதல்வனைவாயிலாகப்புக்குப் புல விதீர்த்துப் புணர்தலுறுநின்ற தலைமகனைத் தலைமகள் ஒருகார ணத்தால்வெகுண்டு, அவன்மார்பகத்துதைப்ப, அவ்வெகுடல் தீர வேண்டி அவனவள்காலைத் தன்றலைமேலேற்றுக்கொள்ள, அது குறையாக அவள் புலந்தழாநின்றமையை அவ்விடத்து உழைய ர் தம்முட்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.

சிலைமலிவாணுதலெங்கையதாகமெனச்செழும்பூண் *
மலைமலி மார்பினுதைப்பத்தன்றான் றலைமன்னர்தில்லை *
யுலைமலிவேற்படையூரனிற்கள்வரிலெனவுண்ணிக் *
கலைமலிகாரிகைகண்முத்தமாலைகலுழ்ந்தனவே. (௩௯௭)

சிறடிக்குடைந்த நாதினர்த்தாரவ ன்
றன்மைகண்டு பின்னுந்தளர்ந்த து.

(இ-ள்.) யான்வெகுண்டு மலைபோலும்வளவியபூணையுடைய தன்மார்பகத்துமிதிப்ப, அவ்வாகத்தைச் சிலைபோலும் வாணுதலை யுடைய எங்கையதென்றேகருதித் தன்சென்னியைத்தந்தனன், அதனான் மன்னனது தில்லையில் உலையிடத்துண்டாகியதொழிலான் மிக்க வேலாகியபடையையுடையவூரனைப்போலக் கள்வரில்லை யென்று கருதி, மகளிர்க்குத் தக்க யாழ்முதலாகிய கலைகளான் மி க்ககாரிகைநீர்மையையுடையாளுடைய கண்கள் கண்ணீர்த்துளி த்தாரையாகிய முத்தமாலையைப் பொருந்தின, அதனுன், இவள் புலத்தற்குக்காரணம் வேண்டுவதில்லைபோலும். எ-று.

இதுவுந்துறைகூறியகருத்து. மெய்ப்பாடு- இளிவரலைச்சார்ந் தநகை. பயன்-தலைமகளைச்சிவப்பாற்றுவித்தல். பிள்ளைவாயிலாகப்புக்க தலைமகனைமேற்றுக்கொண்டு பள்ளியிடத்தானாக மேற்

சொன்னவகையே உண்ணின்றெழுந்தபொருமை காரணம்பெற்றுத் தோன்றியது, தோன்றத் தலைமகன் ஆற்றானாயின் அவ்வாற்றாமைகண்டு சிவப்பாற்றுவித்தல். தலைமகளிடத்தும், தலைமகனிடத்தும் இவ்வகைநிகழ்ந்ததுகண்டுதோழியிதுசொன்னாளென்பது. தலைமகன்முன்சொன்னானெனினுமமையும், என்னை. "மனைவியுயர்வுங் கிழவோன் பணிவு-நினையுங் காலைப் புலவியு ளுரிய." என்றார் தொல்காப்பியனார். தலைமகளவ்வகைசெய்யவும் பெறுமென்பது. (௩௯௭)

## முன்னிகழ்வுரைத்தூடறீர்த்தல்.

முன்னிகழ்வுரைத்தூடறீர்த்தலென்பது. கலவியிடத்தூடாநின்றதலைமகளுக்கு, யாங்கொடியநெறியைச்சென்று சிறியவூரின்கண் மனையதட்பள்ளியின் இச்செறிந்தமெல்லியமுலைகள் என்மார்பிடைவந்தடர்க்கத் தங்கிய சிறியதுயிற்குமாறாகண்டிலம் அதனை நீயுள்ளியுமறிதியோவென முன்னிகழ்வுரைத்துத் தலைமகன் அவளையூடறீராநிற்றல். அதற்குச்செய்யுள்.

ஆறூர்சடைமுடியம்பலத்தண்டரண்டம்பெறினு
மாறூர்மழவிடையாய்கண்டிலம்வண்கதிர்வெதுப்பு
நீறூர்கொடுநெறிசென்றிச்செறிமென்முலைநெருங்கச்
சீறூர்மனையதளிற்றங்குகங்குற்சிறுதுயிலே. (௩௯௮)

முன்னிகழ்ந்தது நன்னுதற்குரைத் து
மன்னுபுனலூரன் மகிழ்வுற்ற து.

(இ-ள்.) தவழாநின்ற இளையவேற்றையுடையாய், ஆறுபாந்தசடைமுடியையுடைய அம்பலத்தின்கணுளராகிய அண்டராதண்டமுழுவதையும் யாம்பெறினும், ஞாயிற்றினுடைய வளவியகதிர்கள் வெதுப்பிய நீறுபரந்த கொடியநெறியைச்சென்று, இச்செறிந்த மெல்லியமுலைகள் எம்முடையமார்பினிடைவந்தடர, நெறியாற்சிறியவூரின்கண் மனையதட்பள்ளியிற்றங்கிய இராவிற்சிறியதுயிற்கு மாறு கண்டிலம், அதனை நீயுள்ளியுமறிதியோ. எ-று.

அண்டாதண்டமுழுதும்பெறுதலால்வருமின்பமும் அத்துயிலான்வந்தவின்பத்திற்கு மாறல்லவென்றவாறு. இளவேறு- புதல்வன். தமக்குத்தக்கபள்ளியுமிடமுமின்மையிற் சிறுதுயிலென்றான். துயிலும்பொழுதிற் றுயிலாப்பொழுது பெரிதாகலின் அவ்வாறுகூறினானெனினுமமையும். துயிற்கென்னுநான்கனுருபு விகாரவகையாற்றொக்குநின்றது. முன்னிகழ்ந்தது கூறுவானாய் உ

ண்ணின்றசிவப்பாற்றுவித்தது. ஞெமுங்கவென்பதூஉம் மர்வச்சென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு-உவகை. பயன் - தலைமகளை மகிழ்வித்தல். (௩௯௮)

## பரத்தையைக்கண்டமைகூறிப்புலத்தல்.

பரத்தையைக்கண்டமைகூறிப்புலத்தலென்பது-முன்னிகழ்வுரைத்தூடறீர்த்து இன்புறப்புணரப்பட்டதலைமகள் பிறர்க்கும் நீ இவ்வாறின்பஞ்செய்தியென்றுகூற, நின்னையொழிய யான்வேறொருத்தியையுமறியேனென்றதலைமகனுக்கு, நின்பரத்தை போகாநின்றவள் நம்வாயிற்கணின்று தேருருட்டிவிளையாடாநின்றபுதல்வனைக் கண்டு நின்மகனென்றையுற்றுத் தழுவ, நீ யையுறவேண்டா, அவன் உன்மகன், உறவு மெய்யாகியவுறவே, ஈதும் உனதில்லமே, ஈண்டுவருவாயாகவென்றியான்கூற, அதுகேட்டுத் தாணிப்போயினாள், யானவளையறியேனாக நீ மாயங்கூறவேண்டுவதில்லையெனத் தான் பரத்தையைக்கண்டமைகூறிப் பின்னுமவனொடுபுலவாநிற்றல். அதற்குச்செய்யுள்.

ஐயுறவாய்நம்மகன்கடைக்கண்டுவண்டேருருட்டு *
மையுறவாட்கண்மழலைத்தழுவமற்றுன்மகனே *
மெய்யுறவாமிதுன்னில்லேவருகெனவெள்கிச்சென்றாள் *
கையுறுமான்மறியோன்புலியூரன்னகாரிகையே. (௩௯௯)

பரத்தையைக்கண்ட பவளவாய்மாத ர்
அரத்தநெடுவே லண்ணற்குரைத்த து.

(இ-ள்.) நமதகன்றகடைக்கட்கண்டுநின்மகனென்றையுற்றுவண்மியசிறுதேரையுருட்டும்மையுற்றவாட்கண்ணையுடையபுதல்வனைத் தான்வந்துதழுவ, அதனைக்கண்டு, அவன் உன்மகனே, உறவு மெய்யாகியவுறவே, இதுவும் நினதில்லமே, ஈண்டுவருவாயாகவென்றியான்கூற, கையைப்பொருந்திய மான்மறியையுடையவனது புலியூரைப்போலுங்காரிகை நாணிப்பெயர்ந்தாள், அதனால், யானவளையறியாதேனாக நீ நினைத்து மாயங்கூறவேண்டுவதில்லை. எ-று.

ஐயுறவாகவெனத்திரித்துக்கொள்க. அரத்தகுநெடுவேலென்பது பாடமாயின், அரத்தொழிலாற்றக்க நெடுவேலெனவுரைக்க. மெய்ப்பாடு-நகை. பயன்-சிவப்பாற்றுதல். ஆற்றாமையே வாயிலாகப்புக்கதலைமகன் தலைமகளைச்சிவப்பாற்றுவிப்பான் நின்னின் வேறுசிலரெனக்கில்லையால் நீ வெகுளற்கவென்றாற்குத் தலைமகளிவ்வகைசொன்னாளென்பது. (௩௯௯)

## ஊதியமெடுத்துரைத்தூடறீர்த்தல்.

ஊதியமெடுத்துரைத்தூடறீர்த்தலென்பது - பரத்தையைக்கண்டமைகூறிப்புலந்து வேறுபட்ட தலைமகளுக்கு, இத்தன்மையனுப் யாவர்க்குமூதியமாகலின், அன்பானன்றியருளாற்பரத்தையர்க்குந் தலையளிசெய்யவேண்டுமன்றே, புறப்பெண்டிரைப்போல யாமவனோடுபுலக்கற்பாலேமல்லேம், அவன்வரும்பொழுது எதிர்தொழுதும் போம்பொழுது புறந்தொழுதும், புதல்வனைப்பயந்திருக்கையன்றோ நமக்குக்கடனாவதெனத் தோழி தலைமகனதூதியமெடுத்துரைத்து அவளையூடறீர்த்து, அவனோடுபொருந்தப்பண்ணுநிற்றல். அதற்குச்செய்யுள்.

காரணிகற்பகங்கற்றவர்நற்றுணைபாணரொக்கல் *
சீரணிசிந்தாமணியணிதில்லைச்சிவனடிக்குத் *
தாரணிகொன்றையன்றக்கோர்தஞ்சங்கநிதிவிதிசே *
ரூருணியுற்றவர்க்கூரன்மற்றியாவர்க்குமூதியமே. (சா)

இரும்பரிசி லேற்றவர்க்கரு ளி
விரும்பினர்மகிழ மேவுதலுரைத்த து.

(இ-ள்.) ஊரன் வேண்டாமைக்கொடுத்தலிற் காரோடொக்கும், வேண்டக்கொடுத்தலின் அழகியகற்பகத்தோடொக்கும், நண்ணிபகல்வியனாகலிற் கற்றவர்க்கு நல்லவுசாத்துணை, இசைபுணர்வானுங்கெழுதகைமையானும் பாணர்க்கு அவர்சுற்றத்தோடொக்கும், நினைத்ததுகொடுத்தலிற் சீரையுடைய நல்லசிந்தாமணியோடொக்கும், அழகியதில்லைக்கட்சிவனதுதிருவடிக்குத் தாராகி அவனாலணியப்படுங்கொன்றைப்பூவின்றன்மையையுடையன், சான்றோர்தமக்குத் தொலையாதநிதியாயிருத்தலிற் சங்கநிதியோடொக்கும், நட்டார்க்கும் பகைவர்க்குந்தப்பாதுபயன்கொடுத்தலின் விதியோடொக்கும், சுற்றத்தார்க்கு அவர்வேண்டியசெய்யவிருத்தலின் அணித்தாகியவூருணியோடொக்கும், அதனான் வரைவின்றி எல்லார்க்கும் இவன்பெறும்பயன். எ-று.

தாரணிகொன்றையனென்பது ஞாங்கனென்பதுபோல உவமைப்பொருட்படநின்றதெனினுமமையும். விதிசேரூருணியென்பதற்கு முறைமையாற்சேர்ப்படுமூருணியெனினுமமையும்.

தக்கார்க்குஞ் சுற்றத்தார்க்குங்கொடுத்தல் வண்மையன்மையின் அவரை வேறுபிரித்துக்கூறினாள். ஊடறீர்ந்துகூடியவழித் தலைமகட்கு உண்ணின்றசிவப்பு ஒருகாரணத்தாற்சிறிதுபுலப்பட, ஊரன்யாவர்க்குமூதியமாகலின் அன்பானன்றி அருளாற்பரத்தையர்க்குந்தலையளிசெய்யுமன்றே,அதனான் நீபுலக்கற்பாலையல்லையென்று குறிப்பினாற்றோழி சிவப்பாற்றுவித்தது.மெய்ப்பாடு உவகை. பயன்-மெய்ம்மகிழ்தல்.

இவ்வகை கூத்தர் மகிழ்ந்து இன்னபோல்வன தலைமகனது குணங்களைப் பாராட்டினாரென்பது· என்னை, "தொல்லவை யுரைத்தலு நுகர்ச்சி வேத்தலும்- பல்லாற்றானு மூடலிற் றணித்தலு-முறுதி காட்டலு மறிவுமெய்ந் நிறுத்தலு - மேதுவி னுணர்த்தலுந் துணிபக்காட்டலு-மணிநிலை யுரைத்தலுங் கூத்தர்மேன" என்றார் தொல்காப்பியனார். இப்பாட்டு ஐவகைத்திணைக்கும் உரித்தாகலிற் பொதுவகைத்தெனப்பெறுமென்பது. (௪௱)

பரத்தையிற்பிரிவுமுற்றிற்று.

---

திருக்கோவையாருரைமுற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

# பாட்டுமுதற்குறிப்பகராதி.



பாட்டுமுதற்குறிப்பகராதி

முற்றிற்று.

# தமிழ்ப்புலமை.

௧. தமிழ் கற்கப் புகுஞ் சைவசமயிகள் முன்னர்ப் பாலபாடங்களைப் படித்துக்கொண்டு, இலக்கணச்சுருக்கத்தைக் கற்றறிந்து, இயன்ற அளவு பிழையில்லாமல் எழுதவும் பேசவும் பழகுக.

௨. நிகண்டு கற்று, அதனுள் அடங்கிய சொற்களையும் அவைகளின் பொருள்களையும் அறிந்துகொள்க.

௩. திருவள்ளுவர்குறள், நாலடியார் முதலாகிய நீதிநூல்களைப் பதப்பொருளுடனே கற்றறிந்துகொள்க.

௪. சமயதீக்ஷை பெற்றுக்கொண்டு, சைவர்களுக்கு இன்றியமையாச் சிறப்பினவாகிய தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்னும் அருட்பாக்களைப் பண்ணுடன் ஓதவும், சுத்தாங்கமாக ஓதவும், பழகிக்கொள்க.

௫. பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், திருவாதவூரடிகள்புராணம், கந்தபுராணம், உபதேசகாண்டம், கோயிற்புராணம், காசிகண்டம், கூர்மபுராணம், சேதுபுராணம், காஞ்சிப்புராணம், திருத்தணிகைப்புராணம், பதினொராந்திருமுறையிற்பிரபந்தங்கள், குமரகுருசுவாமிகள் அருளிச்செய்த பிரபந்தங்கள் முதலாகிய இலக்கியங்களை ஆராய்ந்தறிக.

௬. நன்னூல் விருத்தியுரை, அகப்பொருள் விளக்கவுரை, புறப்பொருள் வெண்பாமாலையுரை, காரிகையுரை, வெண்பாப்பாட்டியலுரை, தண்டியலங்காரவுரை என்னும் இலக்கணங்களைக் கற்றறிந்து, தாம் கற்ற இலக்கியங்களில் இவ்விலக்கண விதிகளை அமைத்துப் பழகுக.

௭. இன்னும், காலம் உளதாயின், தொல்காப்பியம் இளம்பூரணருரை, சேனாவரையருரை, நச்சினார்க்கினியருரை, பிரயோகவிவேகவுரை, இலக்கணக்கொத்துரை, தொல்காப்பியச்சூத்திரவிருத்தி, இறையனாரகப்பொருளுரை என்னும் இலக்கணங்களையும் கற்றறிக.

௮. பூகோளநூல், ககோளநூல், அங்ககணிதம், வீசகணிதம், க்ஷேத்திரகணிதம் என்னும் நூல்களைக் கற்றறிக.

௯. தருக்கநூல்களைக் கற்றறிந்து, எடுத்த விடயத்தை நியாயம் வழுவாமல் எழுதவும் பேசவும் பழகுக.

௰. திருவள்ளுவர்குறள் பரிமேலழகருரை, திருச்சிற்றம்பலக்கோவையார் நச்சினார்க்கினியருரை, கல்லாட நச்சினார்க்கினியருரை என்பனவற்றைக் கற்று, இடைவிடாது பலகாலும் உளங்கொளப்பயிலுக.

௰௧. விசேஷ தீக்ஷை பெற்றுக்கொண்டு, சைவசமயநெறியுரை, சிவதருமோத்தரவுரை, பரமததிமிரபாநு, சதுர்வேததாற்பரியசங்கிரகம் முதலாகிய சமயநூல்களைக் கற்றறிக.

௰௨. கல்விக்குப் பயன் அறிவும் அறிவுக்குப் பயன் ஒழுக்கமுமாம் ஆதலால், தம் வாழ்நாள் முழுவதும், சிவநிந்தை, குருநிந்தை, சிவனடியார்நிந்தை, வேதாகமநிந்தை, சிவத்திரவியங் கவர்தல், கொலை, களவு, புலாலுணல், கள்ளருந்தல், பிறர்மனை விழைதல், வரைவின்மகளிர் விழைதல், பொய், அழுக்காறு, புறங்கூறல், செய்ந்நன்றி மறத்தல் முதலாகிய பாவங்களை ஒழித்து, சிவத்தியானம், சந்தியாவர்த்தனம், பஞ்சாக்ஷர செபம், சிவபூசை, தமிழ்வேதபாராயணம், சிவாலய சேவை, மாகேசுர பூசை, தீக்ஷாகுரு வித்தியாகுரு தந்தை தாய் தமையன் முதலிய மேலோர்களை வழிபடுதல், இரக்கம், பொறை, அடக்கம் முதலாகிய புண்ணியங்களை உடையராய் ஒழுகுக.



௰௩. இருமையின்பத்துக்கும் துணைக்காரணமாகிய பொருளை, பிறவுயிர்களுக்குச் சிறிதாயினும் கேடு பயவாத நல்வழியாலே, ஈட்டுக.

௰௪. நித்தியகருமத்துக்கும் பொருளீட்டுதலுக்கும் உரியகாலம் அல்லாத மற்றக்காலமெல்லாம், சிறிதும் வீண்படாமல், புண்ணியநூல்களை ஆராய்தலிலும், நன்மாணாக்கர்களுக்குக் கல்வி கற்பித்தலிலும், பலருக்குப் பயன்படும் நூல்களையேனும் உரைகளையேனும் செய்தலிலும், போக்குக.

௰௫. இவ்வாறே கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்து விளங்கும் பரிபக்குவர்கள் சற்குருவை அடைந்து, நிருவாண தீக்ஷை பெற்றுக்கொண்டு, ஞானசாத்திரங்களாகிய (௧) திருவுந்தியார், (௨) திருக்களிற்றுப்படியார், (௩) சிவஞானபோதம், (௪) சிவஞானசித்தியார், (௫) இருபாவிருபது, (௬) உண்மைவிளக்கம், (௭) சிவப்பிரகாசம், (௮) திருவருட்பயன், (௯) வினாவெண்பா, (௰) போற்றிப்பஃறொடை, (௰௧) கொடிக்கவி, (௰௨) நெஞ்சுவிடுதூது, (௰௩) உண்மைநெறிவிளக்கம், (௰௪) சங்கற்பநிராகரணம் என்னும் சைவசித்தாந்தநூல்களை உரையுடனே விதிப்படி சிரத்தையோடுங் கற்றறி

ந்துகொண்டு, இச்சாத்திரங்களின் அநுபவப்பயனாய் உள்ள தோத்திரவடிவாகிய மேற்கூறப்பட்ட தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்னும் அருட்பாக்களா... உண்மைப் பொருளைச் சிவனது திருவருள் காட்டக்கண்டு, நின்றாலும், இருந்தாலும், கிடந்தாலும், நடந்தாலும், நெஞ்சநெக்குருக, கண்ணீர்வார, மெய்ம்மயிர்சிலிர்ப்ப, சிறிதும் மறவாது அச்சிவனது திருவடிக்கீழ்த் தூங்கும் உண்மைநிலையைப்பெற்றுவாழ்க.

"கற்க கசடறக் கற்பவை கற்றபின் *
நிற்க வதற்குத் தக." *
"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன் *
நற்றா டொழாஅ ரெனின்." *
"நின்று மிருந்துங் கிடந்து நடந்துநினை *
என்றுஞ் சிவன்றா ளிணை." *

வைணவ சமயிகள் மேற்கூறப்பட்டவற்றுள் சமயநூல்களொழித்து ஒழிந்தனவற்றையும் தங்கள் சமயசித்தாந்தங்களையும் கற்றறிந்து, அவைகளின் விதித்தபடி ஒழுகுக.

தமிழ் கற்றவர்களை நடுவுநிலைமையின் வழுவாது பரீக்ஷைசெய்து, அதில் வல்லவர்களென நன்கு மதிக்கப்பட்டவர்களுக்கு அவரவர் தகுதிக்கேற்ற பெயரும் சின்னமும் கொடுக்கும் சபையார் இக்காலத்தில் இல்லாமையால், தமிழ்க்கல்வியில் வல்லவர்களும் வல்லவர்களல்லாதவர்களும் ஒப்ப மதிக்கப்படுகிறார்கள். அதனால், நமது தேசத்தாருக்குத் தமிழ்க்கல்வியில் விருப்பமும் முயற்சியும் சிறிதாயினும் இலவாயின. பண்டுதொட்டுக் கல்வியிற் சிறப்புற்று விளங்கும் மகிமை பொருந்திய மடாதிபதிகள் பெருங்கருணைகூர்ந்து, காலந்தோறும், தமிழ் கற்றவர்களுள் தங்கள் சந்நிதானத்துக்கு விண்ணப்பஞ் செய்து கொண்டவர்களைப் பரீக்ஷைசெய்து, வல்லவர்களென நன்குமதிக்கப்பட்டவர்களுக்கு அவரவர் தகுதிக்கேற்ற பெயரும் சின்னமும் கொடுத்தருளுவார்களாயின், எம்மொழியினும் இனிய நமது தமிழ்மொழி மிகவளர்ந்தோங்குமே. ஏழை சொல் அம்பலத்துக்கேறுமா!!! ...ம... மையா! இதற்கு யாது செய்யலாம்!

# தமிழ்ப்புத்தகங்கள்.

௧. முற்காலத்தில் உள்ள மகிமை பொருந்திய புலவர்களாலே தமிழிற் செய்யப்பட்ட நூல்களுள்ளும் உரைகளுள்ளும் அளவில்லாதனவைகள், அச்சிற்பதிப்பிக்கும் வழக்கம் இல்லாமையால், இறந்துபோயின. இறவாது இக்காலத்தில் எஞ்சியிருப்பனவைகளும் கையெழுத்துப்பிரதிகளிலே எழுத்தும் சொல்லும் மிகுந்தும் குறைந்தும் பிறழ்ந்தும் திரிந்தும் பலவாறு பிழைபட்டனவாய், சிலவிடங்களின்மாத்திரம் அருகி வழங்குகின்றன. அவைகளுள் யாதாயினும் ஒன்றைக் கற்க விரும்புவோர் அது இருக்கும் இடம் ஆராய்ந்தறிதல் அரிது. அறிந்தாலும், பெறுதல் அரிது. நெடுநாளாகச் செய்த பெருமுயற்சியினாலே பெற்றாலும், எழுத வல்லார் கிடைத்தல் அரிது. கிடைத்தாலும், எழுத்துக்கூலி மிகப் பெரிதாதலால் எழுதுவித்துக் கொள்ளுதல் அரிது. எழுதுவித்துக் கொண்டாலும், ஒத்துப்பார்வையிட்டுக் கொள்ளுதல் அரிது. ஒத்துப்பார்வையிட்டுக் கொண்டாலும், கற்கும் போது, பிழையற ஓதுதலும் பொருள் துணிதலும் கூடாமையால் விளையும் வருத்தம் மிகப் பெரிது. ஒரு நூலைக் கற்றற்கே இப்படிக் காலநீட்டமும் பெருமுயற்சியும் பொருட் செலவும் வருத்தமும் உளவாமாயின், சில வாழ்நாளையும் அதற்குள்ளே பலபிணிகளையும் கவலைகளையுமுடைய சிற்றறிவினராகிய மனிதர்கள் சிலகாலத்திலே பலநூல்களைக் கற்று வல்லராதல் எப்படி! இதனாலன்றோ, நமது தேசத்தாருக்குத் தமிழ்க் கல்வியிலே விருப்பமும் முயற்சியும் வரவரக் குன்றுகின்றன. இவ்வேதுவினால், இப்பொழுது எஞ்சியிருக்கும் நூல்களும் விரைவின் இறந்து விடுமென்பதற்கு ஐயமில்லை. ஆதலால், யாவருக்கும் எளிதிற் பயன்படும்பொருட்டு, முக்கியமாய் உள்ள நூல்களையும் உரைகளையும் பலவிடங்களினின்றும் வருவிக்கப்பட்ட பலபிரதிரூபங்களைக் கொண்டு ஒருவாறு பரிசோதித்து, அச்சிற்பதிப்பித்துப் பிரகடனஞ் செய்தல்வேண்டும்.

௨. செய்யுள் வடிவாகிய நூல்களும் அவைகளின் உரைகளும் கற்றுவல்லவர் சிலருக்கன்றி மற்றவர்களுக்குப் பயன்படாவாம். ஆதலால், விவேகமில்லாதவர்களுக்கும், விவேகமுள்ளவர்களுள்ளும்

இங்கிலிசபாஷையைக் கற்றலினும் லௌகிகங்களைச் செய்தலினும் தங்கள் காலத்தைப் பெரும்பான்மையும் போக்குகிறவர்களுக்கும், பெண்களுக்கும் எளிதிற் பயன்படும்பொருட்டு, நீதிநூல்களையும், சரித்திரங்களையும், சமயநூல்களையும், லௌகிகநூல்களையும் வெளிப்படையாகிய வசனநடையிற் செய்து, அச்சிற்பதிப்பித்துப்பிரகடனஞ் செய்தல் வேண்டும்.

கல்விப் பொருளோடு செல்வப் பொருளும் ஒருங்குடைய மகிமை பொருந்திய மடாதிபதிகளும் பிரபுக்களும் நமது தமிழ் நாட்டிலும் தமிழ்ப்பாஷையிலும் அபிமான முடையர்களாகி, தங்கள் தங்களால் இயன்ற உதவி செய்து, இம்முயற்சிகளை நிறைவேற்றுவார்களாயின், நமது நாட்டிலே எம்மொழியினும் இனிய நமது தமிழ்மொழி வளர்ந்தோங்குமே.

திருக்கோவையாருரை பதிப்பித்துப் பிரகடனஞ்செய்தற்கு உதவிசெய்த கல்வியறிவொழுக்கங்களான்ற ம-ா-ா-ா-ஸ்ரீ பொன்னுச்சாமித்தேவரவர்களுடைய பெருந்தகைமையை நான் பாராட்டுதல் போலவே, அதனைக் கற்போர் யாவரும் மிக்க உவகையோடு பாராட்டுவார்களென்று நம்புகின்றேன். முற்காலத்திலே பாண்டியர்களைப்போல இக்காலத்திலே இப்பிரபு அவர்கள் தமிழை வளர்ப்பார்களென்று உறுதியாகக் கருதியிருக்கின்றேன்.

---

# பிரகடனபத்திரிகை.

---

இதுவவாயில் அச்சிற்பதிப்பிக்கப்பட்ட புத்தகங்கள்.

---

| | ரூபா. | அணா. |
|---|---|---|
| திருச்சிற்றம்பலக்கோவை நச்சினார்க்கினியருரை. | ௩ | ௮ |
| நன்னூல் விருத்தியுரை. - - | ௨ | ,, |
| திருவாசகம், திருக்கோவை மூலம். - | ௧ | ௰௨ |
| வைராக்கியசதகவுரை. வைராக்கியதீபவுரை. அவிரோதவுந்தியாருரை. } - - | ௧ | ௪ |
| பெரியபுராணவசனம். - - - | ௧ | ,, |
| கோயிற்புராணம். - - - | ,, | ௮ |
| அவிரோதவுந்தியாருரை. - - - | ,, | ௮ |
| வைராக்கியசதகவுரை. - - | ,, | ௬ |
| வைராக்கியதீபவுரை. - - - | ,, | ௬ |
| கொலைமறுத்தலுரை. - - - | ,, | ௬ |
| திருமுருகாற்றுப்படையுரை. - - | ,, | ௪ |
| திருச்செந்திநிரோட்டகயமகவந்தாதியுரை. | ,, | ௩ |
| மறைசையந்தாதி. - - - | ,, | ௨ |
| இரண்டாம்பாலபாடம். - - - | ,, | ௨ |
| புட்பவிதி. - - - - - | ,, | ௧௨ |
| விநாயகரகவல், திருச்செந்தூர்க்கலிவெண்பா. | ,, | ௧ |
| போற்றிக்கலிவெண்பா. - - - | ,, | ௨ |

---

இப்போது அச்சிற்பதிப்பிக்கிற புத்தகங்கள்.

---

பெரியபுராணம் சூசனங்களோடு.

திருவள்ளுவர் பரிமேலழகருரை.

தருக்கசங்கிரகம், அன்னம்பட்டியம்.

## இனி அச்சிற்பதிப்பிக்கப்படும் புத்தகங்கள்.

இறையனாரகப்பொருளுரை.
தொல்காப்பியம் இளம்பூரணருரை.
தொல்காப்பியம் சேனாவரையருரை.
தொல்காப்பியம் நச்சினார்க்கினியருரை.
தொல்காப்பியசூத்திரவிருத்தி
பிரயோகவிவேகவுரை.
இலக்கணவிளக்கச்சூறாவளி.
அகப்பொருள்விளக்கவுரை.
புறப்பொருளுரை.
யாப்பருங்கலவுரை.
நவநீதப்பாட்டியலுரை.
சிதம்பரப்பாட்டியல்.
பிரபந்ததீபம்.
வீரசோழியவுரை.
நேமிநாதவுரை.

---

கந்தபுராணம்
உபதேசகாண்டம்.
கூர்மபுராணம்.
காசிகண்டம்.
வாயுசங்கிதை.
சேதுபுராணம்.
அருணகிரிபுராணம்.
காஞ்சிப்புராணம்.
விநாயகபுராணம்.
திருத்தணிகைப்புராணம்.
வேதாரணியபுராணம்.
சிவராத்திரிபுராணம்.

---

திருப்புகலூரந்தாதியுரை.
பழமலையந்தாதியுரை.
புலியூர்யமகவந்தாதியுரை.
மருதூர்யமகவந்தாதியுரை.

இரகுவமிசம்.
வில்லிபுத்தூராழ்வார்பாரதம்.

---

பதினோராந்திருமுறை.
குமாரகுருபரசுவாமிகள் பிரபந்தத்திரட்டு.
சிவஞானசுவாமிகள் பிரபந்தத்திரட்டு.
கச்சியப்பசுவாமிகள் பிரபந்தத்திரட்டு.

---

சிவராத்திரிகற்பம்.
சோமவாரகற்பம்.
உருத்திராக்கவிசிட்டம்.
ஆசௌசதீபிகை.
பிராயச்சித்தசமுச்சயம்.
பரமததிமிரபானு.
சதுர்வேததாற்பரியசங்கிரகம்.
சிவதத்துவவிவேகம்.

---

கல்லாடவுரை.
சீவகசிந்தாமணியுரை.
சிலப்பதிகாரவுரை.
மணிமேகலை.
வளையாபதி.
கலித்தொகையுரை.
அருங்கலச்செப்புரை.
நான்மணிக்கடிகையுரை.
சிறுபஞ்சமூலவுரை.
அறநெறிச்சாரவுரை.
பழமொழியுரை.
கார்நாற்பதுரை.
களவழிநாற்பதுரை.
புறநானூறுரை.

—*—